எந்த நாளுமிங் கதிசயங் காட்டுமித் தீர்த்தம்
பந்த நீங்குற மூழ்கினர் பேற்றையார் பகர்வார்
புந்தி யாலளந் தறியொணு விசேடத்திற் பொங்கு
மூந்த நீர்வினை யிததுநன் ருலென மொழிவான். (௩௯)

நீப மாகிய வேதவா கமங்கணின் மலனு
மாப ரம்பரன் காட்சிதந் தருணாள்வணங்கித்
தாபமெம்மைதீர்ந் தியாங்கண்முன் றழைத்திட வருளின்
றீப மாகிய தீர்த்தமொன் றுதவுதி யெனலும். (௪0)

கருணை நாயக னியம்புவான் வேதவா கமமே
பொருணை யம்பெறு மதிகுய்யம் புகன்றிடக் கேண்மின்
னருண மார்தரு தீர்த்தமே நமதுருத் தையல்
வருண மார்தரு பீடமா மிலிங்கத்தின் வடிவம். (௪௧)

எம்மிற் றொன்றியே யொடுங்குவர் மாலய னிமையோர்
தம்மிற் றொன்றிடுஞ் சராசர மெவையுநந் தன்மை
நும்மிற் றொன்றிடக் காண்மினீர் நூல்வழி வன்றோ
கம்மிற் றொன்றிய வுலகர்க்குக் காணுத லரிதால். (௪௨)

இன்ன ணம்புகன் றிலிங்கத்தி னுற்பவ மாகி
யுன்ன ரும்மொரு குரோசதூ ரத்திற்குள் ளாகச்
சன்னி திக்கெதிர் தோன்றிடத் தன்கரு ணையினுற்
பன்ன ரும்புனற் றீர்த்தமுண் டாக்கினன் புகர்வான். (௪௩)

யாமி யற்றலா லிதுசிவ தீர்த்தமித் தீர்த்தஞ்
சேம மாருயிர்க் கெனப்படிந் திடிற்றரி சிக்கிற்
பூமெலி றண்புனி லுண்டிடிற் புரோக்கணம் புரியி
ளும நோய்களு நீங்குமெப் பாவமு நசிக்கும். (௪௪)

கங்கை யேமுதற் றீர்த்தங்கள் கருதிநம் விழியை
யங்கை யாற்புதைத் திட்டநா ளமலையங் குலியின்
றங்க மாகவந் துதித்தலிற் புனிதமாந் தோன்று
மிங்கு நம்மிடத் துதித்தலா லவற்றினீ ததிகம். (௪௫)

இன்னு மொன்றியா மாடுநின் மாலிய தீர்த்தந்
தன்னின் மூழ்கினுண் ணிற்றொடிற் காணினுஞ் சரிக்கிற்
றுன்னு பாதகந் தொலைத்துடன் றொல்கதி யளிக்கும்
பன்னு மீதன்றி மற்றொன்று பகருதுங் கேண்மின்

வேறு.

௬ அருப்பூம் வெமையாட்டுங் கருப்பூர தீர்த்தமிதி லதிக காமே, விருப்பூரக் கொண்டருளி வேண்டுவான் வேண்டியதை மிகவு மீவோ, நெருப்பூர்பஞ் செனநித்த முழுந்தளவுண் பவர்பவங்க ணீறு மூண்மை, கருப்பூர வாஞ்சையினாற் கருப்பூர சொக்கெனும்பேர் சூருதிக் கொண்டோம். (௪எ)

வேதநெடு மான்முனிவர் விண்ணவரே முதலினர்நாம் விரும்பி யாடுங், தாதுகமழ் கருப்பூர்நின் மாலியதீர்த் தம்விரும்பித் தவத்தாற் கொள்வா, ரோதுவதென் வேள்விமுதற் புண்ணியமுன் செய்தவர்க் கே யுதவுந் தீர்த்தங், கேதமுறு பாதகர்க்கு நாமளித்தா லன்றியுண் ணக் கிட்டா தன்றே. (௪அ)

சிவதீர்த்த முதலாநின் மாலியதீர்த் தச்சலத்தாற் சிறப்புற் றோங்கி நவதீர்த்து வளர்மினிதி லெழுகடலு நாமழைத்து வருவிப் பேம்பின் சவதீர்த்தின் னருள்கொடுக்கு மெனவருளி யீசனிலிங் கத்தினுஞன் றவதீர்த்த நீர்நனைந்து கதம்பமுழம்வில் லமுமெங்குந் தழைத்ததன்றே.

இத்தீர்த்த மாதடத்தி லிறையருளா னெழுகடலு மியைந்த தென்றான், முத்தீர்க்கு மத்தடத்தின் மூழ்குனர்பே றளவையெம்மான் மொழிய லாமோ,வத்தீர்த்தந் தருப்பித்துப் பிதிர்க்கடன்க ளொன்றாற் றி லதிகங் கோடி, புத்தீர்க்கு நரகமுந்தும் பிதிர்க்களெல்லாஞ் சிவ லோகம் பொருந்தி வாழ்வார். (௫0)

உம்பர்புகழ் சிவதீர்த்த மகிமையிவை யுவந்துபடித் திடுவோர் கேட்போர், வெம்பவமெல் லாந்தொலைத்துச் சிவலோகத் தெய்திவிம லன்போல் வாழ்வர், நம்பரனுங் குமரகுரு பரன்புகன்ற வாறுமக்கு நவின்றே மென்றே, கும்பமுனி மாதவத்து வசிட்டாதி முனிவரர்க் குக் கூறி னனால். (௫க)

நான்காவது தீர்த்தமகிமையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ககஅ.

ஐந்தாவது

## நடம்புரிந்தவத்தியாயம்.

வந்தனை செய்து கேட்ட முனிவரர் மலையக் கோவே
சிந்தனை செய்த வேதா கமந்தரி சிக்க நாத
னெந்தநா ணிருத்தஞ் செய்தா னவன்பிர மாணம் யாதிங்
கந்தநாட் கண்டோ ரியாவ ரவையெ்தொகுத் துரைத்தி யென்றார். (க)

நன்றுநீர் கேண்மி னென்று வகத்திய னவில்வான் ஞான
மொன்றியே வளரு நீப வுருவின்வே தாக மங்கண்
மன்றுளே நடிக்குஞ் சொக்கை யிரண்டற மனத்துள் வைத்தே
நின்றுமா தவங்க ளாற்றி யுறைந்தன நெடுங்கா லங்கள். (உ)

உறைந்திடுங் கான்முன் வந்த வுருத்திரப் பிரள யத்தான்
மறைந்திடு முலகத் தோடு வானுளோ ரையுமொ டுக்கி
நிறைந்திடு மீசன் றானே யொருவனாய் நின்றான் காலத்
திறந்தெரிந் தியாவு முன்போற் சிருட்டிசெய் திடுவா னெண்ணி. ()

தன்னிட மாக விச்சா சத்தியைத் தோற்று வித்து
மன்னுமச் சத்தி யான்முன் னொடுக்கிய வாறே நல்க
முன்னுற வருளிச் செய்தா னவளிட மாக முன்போற்
றன்மைசே ரயன்மால் விண்ணோர் சனகாதி யோகர் தோன்றி. ()

மற்றுள பிரவஞ் சங்க ளியாவுமவ் வரம்பிற் றோன்றி
முற்றுறு முலக மியாவு முன்னையி னிருந்த திப்பாற்
கற்றையஞ் சடையான் வேதா கமங்களுக் கருளை நல்கச்
சொற்றிடு மிலிங்க நின்றுந் தோன்றினான் விடைமேன் முன்போல்.

வெளிவரு சொக்கன் றன்னை வேதவா கமங்க ளோக்கித்
துளிவரு மன்பின் முன்போற் றோத்திரஞ் செய்து நிற்பக்
களிவரு மன்பர்க் கன்பன் கருணைசெய் தருளித் தூய
நளிவரு முளத்தீர் கேண்மி னல்குவம் வரங்க ளென்றான். (சு)

முன்புநீ யருளிச் செய்த மொழிப்படி யாங்கள் காணத்
தென்புலி விசேட மாகத் திருநடங் காட்ட வேண்டு
மன்பதை யுலகங் கண்டு வாழ்வுற வேண்டு மென்ன
வன்பினாற் றொழுது கேட்ப வவ்வர மளித்தெம் மையன். (எ)

கண்டுசே விக்க ஞானக் கண்கொடுத் தருளி மன்றிற்
பண்டைவே தக மங்கண் முதலிய பரவிக் காண
வண்டருங் காரெ ணோத பொற்பத மதிர வீசித்
தண்டலி னிருத்தஞ் செய்யத் தனைநடு நடுங்கிற் றன்றே. (அ)

ஞானில நடுங்கக் கண்டு நந்திரு நடம்பொ ருதென்
மூனிலேந் தாடுஞ் சொக்கன் றிருவுளத் தடைத்த ழைத்து
வானிலம் போற்றுந் தூய மாபெருங் கயிலை தன்னைப்
பூநிலச் சிவன் முத்தி புரத்தினி லிருத்திப் பின்னர். (௯)

அக்கயி லையினெட் போத மான்றமுச் சபையி னம்பொ
னெக்கவின் றெளிருந் தூய வுத்தர மன்றந் தன்னிற்
செக்கர்மே னியவெம் மண்ண றிருநடம் புரிந்தான் கண்டு
மிக்குயர் ஞானக் கண்ணாற் றுதித்தவே தாக மங்கள். (௧0)

மூவரா லறிய வொண்ணாச் சிவலோகந் தனையு முன்னைப்
பாவறிந் துதவு வாணீ பவனமத் தியினை ழைத்து
மேவரு நகர மாக்கி விரும்பிநீர் காண்மி னென்ன
யாவருங் கண்டு போற்றி யரகர வெனச்சேவித்தார். (௧௧)

அவ்வுல கத்தின் மேவு மகாதிநந் தியைவெள் ளேற்றைத்
தவ்வுறு துறைக ணங்க டன்னையுங் காட்டி யப்பா
னவ்விசேர் கரத்தி னுன்முன் னவின்றமார் கழிமா தத்திற்
செவ்வியா திரைநா * ளீசா னத்திரத் தினமன் றத்தில். (௧௨)

அங்கயற் கண்ணி யம்பொ ஞசனத் திருந்து காணப்
பங்கய வலத்தாள் பண்பின் முயலகன் முதுகி லூன்றித்
துங்கநூ புரங்க ளார்ப்பத் துலங்கிடத் தாள்குஞ் சித்தே
செங்கைமான் மழுவோன் றூய சிங்கார நடனஞ் செய்தான். (௧௩)

அரியயன் முதலாம் விண்ணோ ரம்புலி பாம்பு மோனந்
தெரிதரு முனிவர் மற்றுஞ் செப்பிய வனேகர் காண
விரிசுட ரமுத லிங்க முன்னரின் வெள்ளி மன்றிற்
பரிவொடு பரமா னந்தப் பராபர நிருத்தஞ் செய்தான். (௧௪)

உற்றகா ரணத்தி னாற்பூ வுலகமா கயிலை யென்று
நற்றவர் புகழ்பூ லோக சிவலோக மென்று நாமம்
பெற்றது மதுரை யிந்தப் பெருங்கதை படிப்போர் கேட்போர்
கற்றுளோர் பவங்க ணீங்கிக் கதியடைந் திடுவர் திண்ணம். (௧௫)

---

* ஆதிரைநாளிலே, உஷக்காலத்திலே. உஷக்காலம் வடநூலிற் கூறப்பட்டது.

கெழுத்தினே மென்னக் கேட்ட நெடுந்தவர் மலையக் கோவே
மகத்துவத் ததிக மிந்த மாபெருங் கயிலை யென்றாய்
தொகுத்தவக் கிரிவ ளங்க டொகைவகை விரிவா யாங்கள்
பகுத்துணர்ந் தறிய வேண்டும் விளங்கநீ பகர்தி யென்றார். (௧௯)

ஐந்தாவது நடம்புரிந்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௧௪.

---

ஆறாவது

## மகாகைலமான்மியமுணர்த்தவத்தியாயம்.

வினமிலை யென்னும் பன்னி வினவிடத் தரும சன்மா
முனமுறை செய்தான் றெய்வ முதுபெருங் கயிலை வண்மை
பனவரிற் றவத்தா னன்றேன் பகர்ந்தவா றுரைப்பேங் கேண்மி
னனகமா முனிவிர் காளென் றகத்திய னருளிச் செய்வான். (௧)

சிவனையே பொருளாக் கொண்டு தெளிந்தபே ரறிவின் மிக்கா
ணவமுறு கற்பின் பன்னி வினமிலை நவில்வாண் ஞானத்
தவர்களிற் பெரியோய் மிக்குத் தனிப்பெருங் கயிலை யென்றே
யுவமையின் ஞான நூல்க ளுரைக்குமா துணர வேண்டும். (௨)

அவ்வரை யிருக்குந் தான மதன்கொடு முடியி லக்க
மெவ்வமி லுயர்ப கற்சி யுறைபவ ரியைபும் போகந்
தவ்வுறுந் தவைவி ரித்துச் சாற்றுதி தமியேற் கென்னக்
கெளிவைதீர் தரும சன்மாக் கழறுவான் மனைவி கேட்ப. (௩)

சொற்றிடும் புவனந் தோறுந் தொடுகடற் பூவி னுள்ளு
மற்றுள தீவு தோறுங் கயிலைமால் வரைக ளுண்டு
கற்றைவார் சடையெம் மீசன் கருணைமா துமையா ளோடு
முற்றிடு மங்கங் கெல்லா முள்ளவா றின்னுங் கேணீ. (௪)

பிறங்குமவ் விடங்க டோறும் வைகுண்டம் பிரம லோகந்
திறங்கெழு கமலக் கண்ண னெண்கண்ண ரவற்றிற் சேர்வா
ரறங்கொள்பா லாழி நள்ளிற் சுவேததீ வதிக மாங்க
ணிறங்கெழு மாதி மாயோ னறிதுயில் கொள்வா னீங்கான். (௫)

பிரமலோ கங்க டன்னிற் பெரிதுசத் தியவு லோகம்
பரமனும் பிரமனுக்குப் பரிவின்வீற் றிருப்பான் றூய
வரமுறு கயிலா யங்க டன்னின்மா கயிலை மிக்குத்
திரமுறு மதில வாதி சிற்பர சதாசி வன்றான். (௬)

மூலமே முதலா தார மாறினு முக்கட் பெம்மான்
சாலவே யுறைந்தா னேனு மனுகதத் தநிகந் தானு
மாலகோ விழியாய் கேணீ யதுவென விதுவி சேட
நூலறி வுடையோர் தாமு நுவல்வர்மா கயிலை யென்றே. (௭)

தேசுறு மொளியு டைத்தாய்ச் சிலையொடு மண்டா துக்கண்
மாசுறு வம்பொன் றங்கம் வளர்நவ மணிகள் வெள்ளி
பேசுறி னவையு மன்று பெரும்பராஞ் சோதி ரூப
மாசுறு நித்த மாகு மதன்றிறம் புகல்வா ரியாரோ. (௮)

அரும்பெருங் கயிலை யாகு மதிலடைந் திடுவோ ரொன்றுந்
திரும்பவும் வாரார் மூலச் சிவத்தொடுங் கலந்து வாழ்வர்
விரும்புமவ் விமலன் போலு மெய்க்கிரி வடிவம் வாசச்
சுரும்பிமிர் குழலாய் கேளொன் றதன்பிர மாணஞ் சொல்வான். (௯)

வேறு.

பாங்குறுமிவ் வுலகிலுள்ள தீவுக் கெல்லாம் பகரினடு வாயிருக்கு ஞ் சம்புத் தீவ,மோங்ககற்சி யோசனையோ ரிலக்கஞ் சூழு மூவர்க்கட லு மவ்வளவை யவற்றைச் சூழ்ந்து, நீங்கரிய வாலந்தீ விரண்டி லக்க நிறைந்தகன்ன விரதவா ரிதியு மற்றே,யாங்கதற்கப் பாலாஞ்சன் ம லித்தீ வந்தா னளவைநா லிலக்கமதுக் கடலு மஃதே. (௧௦)

நிறைகுசைத்தீ வோசனையெட் டிலக்கஞ் சூழு நெய்க்கடலத் தொகையப்பாற் கிரவுஞ் சத்தீ,வுறைதருமோ சனைபதினா றிலக்க மப்பா லோங்குததிக் கடலுமுறைத் திடுவ ரவ்வெண், குறைவறுச கத்தீவோ ரிரண்டு முப்பான் கூறுமோ சனையிலக்கம் பாலா ழிக்கு, மறைகுவரவ் வெண்ணேபுட் கரதீ வந்த னறுபானுன் கிலக்கமவ் வெண் ணீரா ழிக்கும். (௧௧)

அங்நீரா ழியைக்சூழ்சக் காவா ளக்குன் றுயிரமோ சனையகல மு ரப்பு மஃதே, தொன்னீர்மை தருமதன்மேன் முறையிற் சந்த்ர சூரி யர்கீட் டிசையினுதித் திடுவர் மேல்பா,னன்னீர்மை பெறச்சென் றத் தமன மாவர் நவின்றிடுமக் கிரிக்குளன்றி யப்பாற் செல்லார், பன்னீ ர்மை வரைக்காணப் பட்டுங் காணப் படாதமையா லும்லோகா லோக மென்பார். (௧௨)

நேமிவான் கிரியப்பாற் புறப்பே ராழி நிகழ்ந்ததைச்சூழ் பூமியு
ம்பொன் மயும தாகுஞ், சேமமுறு பாழிசெறி யிருளே மூடுஞ் செங்
கதிரோன் சசியிரவு பகலங் கில்லை, நாமமுறு பல்லுயிர்த்தோற் றமு
மங் கில்லை நவின் றிடிலங் கிலமேடு பள்ள மாகுங், தாமநறுங் குழலா
யவ் விடத்தின் றன்மை சாற் றினே மற்றுமினிச் சாற்றக் கேணீ. ()

நாவலந்தீ வேமுதலா மிக்குன் றந்த நவில்கோடி யிரண்டிலக்க
மைம்பா னென்கா, மேவமில்பே ராழிவரைக் கப்பா னூல்க ளியம்பி
யவண் டச்சுவர்மட் டளவை கூறின், மேவருநாற் பானேழு கோடி
மேலும் விளம்புவர்நாற் பானோடா றயி லக்கங், தாவில்வரைக் க
ப்புறமிப் புறமு மேருச் சயிலநடு வந்தமைம்பான் கோடி தானும். ()

தகவுறுமிப் பூமிநடு மேரு வீரொண் டாழ்ந்தெண்பா னென்குச
கத் திரமே லோங்கிப், புகலருமுப் பானென்கா யிரம தாகப் புகன் றிடு
மோ சனைபரந்தா யிரமென் றேது, நிகரில்கொடு முடியிலங்கவில
ங்கு மந்த நெடுவரைக்குப் பூருவதிக் காதி யாக, விகலறுமிந் திரனகர
முதலா மற்று மியம்புதிசைப் பாலருறை பதியும் வைகும். (௧௫)

நவமுறுமா கயிலைவளஞ் சேட னானு நவிலவரி ததிகுய்ய நவிற் றி
ன் மாதே, யிவர்புகழ்சேர் குபேரனுறை திசைக்குக்கீழ்பா லீசான
ருறுதிசைக்கு மேல்பா லண்டச், சுவரினுக்குத் தென்பாலா ழிக்கு
ன் றிற்குத் தொகுத்தவடு பாற்பகுத்த பதின்முக் கோடி, நுவலள
வை யோசனைதூ ரத்திற் கப்பா னென்மைபெற விருக்குமது நுவ
லுங் காலே. (௧௬)

தற்பரமாம் பெரியவட கயிலைச் சுற்றுங் தாவில்வண * பூமியத
ன் றன்மை கூறி, னுற்பனவங் கிலவளவை பத்துக் கோடி யோசனை
யோடிருபத்து மூன் றி லக்கம், பொற்புறுகற் பகம்பாரி சாத மற்று
ம் பொன்மயமு நவமணியின் மயமு மாகி, விற்பொலியுங் தருக்கள்ப
ல வெங்கு மோங்கு ழிக்குநவ நதிமுதலா றநேக நண்ணும். (௧௭)

தாமரைவா விகள்குளிர்செங் கழுநீ ரோடை தண்குமுத மலர்
மடுக்க ளநேகம் வைகுங், காமொளி விளங்கும்வரைச் சோதி யாலே
காந்திடுமங் கிலத்திருள்பே ரொளியே தங்கும், பூமருமத் தருவன
த்து ணடுவே யோங்கும் போற்றுபெருங் கயிலாயம் புனித மாகு,
மாமறைகாண் பரியசிவன் றனக்கெங் நாளு மருவிரண்டாங் திருமே
னி வடிவாய் நிற்கும். (௧௮)

---

* வணம் - வனம்;

நிலம்பெறுமப் பெருங்கயிலை யகற்சி கூறி னிகழ்த்துமொரு திசையொருபஃன் கோடி யாக, மலைவறநாற் றிசைச்சுற்று நாற்பா ன் கோடி வகுத்திடுமோ சனைகீழின் றாழ்வு கூறிற், பிலமுறுகி ழேழு லக முருவிக் கூர்மம் பிறங்குபதங் கீண்டுவே ரப்பாலோடு, மலைவ றமே லுயரமண்ட முகடு தோயு மதுநாளம் போலேக மாகி யோங் கும். (௧௯)

மேருநிகர் தருவொவ்வொன் றத்தன் மைத்தாய் வெய்யகொலை க் கொடுமுடிக ளளவி லாத, சாருமிகு வளத்தொடுமி லங்கு மந்த் த னிக்கயிலை சாற்றுகொடு முடிகட் கெல்லாஞ், சேருநடுக் கொடுமுடி யிற் சிவலோ கந்தான் செப்புபதின் கோடியொரி லக்கத் தெண்பா, ஞூறுமா யிரமெனுமோ சனைய கற்சி யதன்மகிமை விரித்துனக்குப் புகல்வாங் கேணீ. (௨௰)

ஓரேழு திருமதில்சூழ்ந் திருக்கும் வாயி லுமைத்திடலொவ் வொ ருமதிற்கு நான்காந் துய்ய, பாரேழும் புகழ்தரவுன் னினர்க்கே நல் கும் பல்வளங்க ணெருங்கியதி சயமாய்த் தோன்றும், காரேழுந் தவ ழெயில்சூழ்வ்வு லோகங் களங்கமறு நவமணியால் விளங்கி யோங்கு, மீரேழு புவனமுமேத் தரிய சிந்தா மணிமயலீ லாவனைக ளெங்கு மோங்கும். (௨௧)

மெத்துபுகழ் பெறுநாறு விதங்க ளாகி விளங்குதிரு வீதிகளு ம னேகஞ் சாற்றுஞ், சித்தர்சாத் தியர்முதலாங் கணங்கள் பல்லோர் சிற ப்புறவே யவ்விடத்திற் செறிந்து சூழ்வ, ரித்தனையுஞ் சூழ்தருமோர் முதன்மை யாக வியம்புமதி லுயர்ச்சியைக் கோடி வாயி, லத்திலுய ரோசனையே ழிலக்க மாகு மவ்வாயி ளன்குங்காப் பவரைக் கூறில்.

பரவுவிநா யககணங்கள் வன்மெய வென்னப் பகர்தருகால் கைக ளுடன் றடிகை யேந்தி, யுரவுசெறிந் திடுசொன்ன வாயில் காப்ப ரு ள்ளிரண்டாந் திருமதிலி னுயர்பு கூறில், விரவுமைம்பா னிலக்க ம்யோ சனைநீள் வாயில் விளம்புமுயர் பாறிலக்கம் வாயி ளன்கும், வரமுறக்காத் திடுவர்சிவ பத்த ரான வலிகெழுதிண் புயஞ்செறிமா கணங்கள் பல்லோர். (௨௩)

மூன்றாமுட் டிருமதிலி னுயர்பு கூற்றின் மொழிகுவாவ் வமைக் கோடி வாயில் கூறி, லேன்றுநி னுயரமுமைந் திலக்க மன்னீ வெழி ல்வாயி னன்குங்காப் பவரியா ரென்னி, லூன்றுநி வேதாள கணங்க

ள் பல்லோ ரோங்குமடல் வச்சிராயு தங்கை யேந்தி,யான்ருதி காவல் புரிந் திடுவ ரின்னு மவனுறைவர் சிலரவரைப் புகல்வாங் கேணீ. ()

சிவகதைகள் சிவாகமங்க ளன்பா ஞூனூந் தேர்ந்துணரும் பெரி யோர்முக் கண்ண ராகித், தவமறுநித் தியத்துவம்பெற் றிருப்ப ருள் ளிற் சார்ந்திடுநோ லாமதிலி னுயரஞ் சொல்லி, னவையறுமைம் பா னிலக்க முயர்பு வாயி னுன்கிலக்கஞ் சங்கட்ட கணங்க ளங்கை, யுவ வுமியிவெங் குலிசியராய் வாயி னுன்குங் காப்பர்சிவ சாரூப ருறை வ ரங்ஙன். (௨௫)

ஐந்தாமுண் மதிலினுயர் புணர்ந்து கூறி லனைக்கோடி யோசனை மூன் றிலக்கம் வாயின், மைந்தார்சுப் பிரமணிய கணங்க ளாறு வத னங்கள் விளங்கிடவே லங்கை யேந்தி, முந்தார்வ முறவாயி னுன்குங் காப்பர் மொழிதருசா மீபபத மடைந்தோ ரென்று, நந்தாவவ் வாவ ரணத் துறைவர் வேண்டு நறியபதார்த் தத்துமித்தந் திருத்தி பெற்றே.

ஒப்பரிய தாய்ச்சுவர்க்க லோகத் திற்கங் குரித்தாம்வத் துக்களவ னுடைத்தாய்ச் சொன்ன, வப்புவனத் தேவாண்டி லீரைஞ் ஞூறு ண் டனுபவிக்குஞ் சுகமொருநாண் மத்திய னத்தாஞ், செப்பரிய சி வனருளா லவனுற் றோர்க்குத் தேடிக்கிட் டாதவத்து வெல்லாங் கி ட்டு, மைப்புயன்மே னியன்விதியா லளக்க வொண்ணு வளத்தினிலி ங் கறிந்ததுநாம் புகன்றே மாதே. (௨௭)

நவிற்றிடுமவ் வாவரணத் துள்ளி லாறு நன்மதிலி னுயர்புமனை க் கோடி யாகும், பவித்திடும்யோ சனைவாயி லிரண்டி லக்கம் பகர்ந் திடுவ ருன்னதமவ் வாயி னுன்கின், புவித்தலமேழ் புகழ்கிழை வாயி றன்னிற் புழைக்கைமத வேழமுக னுலக கற்கி, கவித்திடும்யோ சனை மம்பா னிலக்கஞ் சூழ்ந்து கனம்பெறுமே ழாவரணத் துடனே வைகும். (௨௮)

விக்கினே சுரகணங்க ளநேக ராதி வேழமுக னைத்துதிக்கும் ப த்தர் பல்லோர், முக்கணுடைச் சோடசவைங் கரரின் றோர்கண் மொழிதருமவ் விடத்திற்சூழ்ந் திருப்பர் நள்ளிற், றக்கநலந் தருமோ ரா லேயம்வி ளங்குஞ் சாற்றுறுமவ் வாலயத்தி னிடத்தைக் கூறின், மைக்குழலாய் ஈற்றிசையு மிருபத் தொன்றும் வகுத்திடும்யோ சனை யிலக்கம் வகுப்பா மின்னும். (௨௯)

அத்தகைய சினகரத்து ளிருக்கு மோர்பா னைந்திலக்க மகன்றுகி ள ரணியா லோங்கி, மெத்துமொளிர் மாணிக்க மயமா தாகி மேன்

மைபெற வளரரியா சனத்தின் மீதே, யுத்தமமா கணபதியாங் கினி து மேவும் யோர்ச்சன காதியராங் குவந்து போற்றப், பத்தியொட க் கணபதிதன் னனுக்கை பெற்றுப் பத்தர்களவ் வாலயத்தி னுள்ளி ற் செல்வார். (௯0)

மேற்றிசைவா யிலிற்சுப்பிர மணிய லோகம் விளம்பிலரைக் கோடியோ சனைவி சாலஞ், சாற்றிடுமே ழாவரணத் துடனே வை குந் தங்குவர்சுப் பிரமணிய கணங்கள் பல்லோ, ரேற்றமுறுங் குக சாரூ பத்தைப் பெற்றோ ரெண்ணிலர்சூழ்ந் திருப்பரதி னிருக்குங் கோயில், போற்றிடும்யோ சனைபதினெட் டிலக்க மாகப் புகன்றிடு வ ரகற்சியின்னும் புகல்வாங் கேணீ. (௯க)

மணிகள் * பல சாமரங்கள் விளங்க ரத்ந மயமாகும் விமானமந் தப் புரத்துண் மன்னும், பணிகிளரவ் விமானமத்தி யின்மா ணிக்கப் பரியவயி ரேயத்து மயம தாகி, யிணையிலரி யாசனமைம் மூன்றி லக் க மியம்பியயோ சனையகன்றே யிருக்கு மாங்க, ணணிகிளர விருமரு ங்குந் தெய்வ யானை யனைங்குவள்ளி மேவவமர்ந் திருக்குங் கந்தன்.

மூனைவடிவேன் முருகேசன் வடிவம் பெற்றோர் மூதுணர்யோ கியர்சனகா தியர்மற் றுள்ளோ, ரனைவரும்போற் றிப்பிரியா திறை ஞ்சி நிற்ப வருள்கொழிக்கு மவனருள்பெற் றனுக்கை பெற்றே, வி னைதவிர்மெய் யன்பினரா லயத்துட் செல்வார் விளம்பியதென் றி சைவாயின் மேன்மை கூறி, னினைவரிய தனிப்பொருளா மகோர மூர்த்தி நிலவுலக மகற்சியரைக் கோடி யாகும். (௯௯)

பன்னருமே ழாவரணஞ் சூழ வைகும் பயங்கரமா மகோரக ணம் பலருஞ் சேர்வ,ரன்னதிலா லயத்திலரி யாச னத்தி லமர்ந்தருளு மாதியரா மகோர மூர்த்தி,யின்னருள்பெற் றாலயத்தி னுள்ளிற் செல் வா ரெம்பிரா னன்பர்வட வாயி றன்னிற், றன்னிகரி லாவாம தேவ லோகஞ் சாற்றுவர்யோ சனையகற்சி யிலக்க மைம்பான். (௯௪)

ஓரேழா வரணஞ்சூழ்ந் திருக்கு மாங்கே யுயர்வாம தேவகண முவப்பின் வைகுங், காரேழுந் தவழ்மதில்சூழ் கோயி றன்னிற் கதி ர்விரிமா ணிக்கவரி யாச னத்துப்,பாரேழும் புகழாதி வாம தேவப் பர மனினி துறையுமவ னருக்கை பெற்றே, யீரேழு புவனமும்போற் றிடமெய் யன்ப ரிருமைதரு மாலயத்தி னுள்ளிற் செல்வார். (௯௫)

* மணிகள் - ஒலிக்குமணிகள்.

எத்திபவிவ் வாவரணத் துள்ளின் மேவு மேழாமா வரணமதி ஞாயரங் கூறிற், பூத்திடுமோ சனைமைம்பா னிலக்கம் வாயில் பொருந்துமுயர் பிலக்கமதிற் பொருந்தி நாளு,மாத்திகர்சூழ் தருபிரம தகண்ஞ் செங்கை யடலயிற்கு லந்தாங்கி வாயி ஞன்குங், காத்தளிப்ப ரன்னாறுக் கையிஞ லன்பர் கருதரும்பே ராலயத்தி னுள்ளிற் செல்வார்.()

சொல்லியவே ழாவரணத் தகற்சி மூன்று தொகுகோடி யிலக்கத்தா யிரமெண் பானு, மெல்லொளிசே ராவரண முள்ளி லேந்துண்டிடம்பிலவற் றகற்சியுமேழ் கோடி காண்க, மல்லல்செறி யைந்தினின்மூந் தியதாச் சொல்லு மதிலுயர்ச்சி யோசனையைம் பானி லக்கம், பல்லுலகந் தந்தபரா சத்தி லோகம் பகர்தருமவ் வாவரணந் தன்னின் மேவும். (௩௭)

அம்மையுமை சாமீப மடைந்து ளோர்க ளாங்குறைவ ரவ்வுலகின் றன்மை கூறி, லும்பர்தொழ விளங்குபஞ்சா வரணஞ் சூழு மொவ்வொன்றி னுயரமும்யோ சனையைம் பானு, நம்பியவா வரணசத்தி யநேகர் சூழ நாப்பணுறைந் திடுவள்பரா சத்தி கோயி, லிம்பர்புகழ் தருகோடி யுயர மாகு மியம்பியயோ சனையதின்சீ ரின்னுஞ் சொல்வாம்.

ஒளிருமிரத் தினவயிடூ ரியமா ணிக்க முரைமாற்றி லாப்பசும் பொன் னிவற்றி னுலே, தளவிசைசேர்த் தொன்றினுமொப் பிடவொண் ணுத தாவிலொளிக் கிங்கிணிக ளநேக நாற்றி, யளவில்விதானங்கொடிதோ ரணமேற் கட்டி யணிகிளர்பூம் பந்தர்மற்று மலங்காரஞ்சேர், கிளருமிரத் திநதீபம் விளங்க லுங்குங் கேழ்கிளர வோங்குகர்ப்பக் கிருகந் தன்னில். (௩௯)

யோசனையைம் பானிலக்க மகல மாகி யொளிருமிரத் தினமயமா யிலங்குஞ் சிங்க,வாசனத்தி லினிதிருக்கு* மாதி சத்தி யன்னவ ளுன் னதநாற்பா னிலக்க மெண்பு மாசின்மதி யனேகமவ ணுதித்தா,லென்ன வண்மைபெறு திருமேனி பிரகா சிப்பத், தேசுபெறு திருவழகி னதிக மாகிச் சிறப்புறுபல் லலங்காரத் துடனே கூடி. (௪0)

அராகமெனும் பாசங்கோ பாங்கு சத்தோ டபயவர தமுமிளிர்பேரங்கை தாங்கி, விராகமுறு மெய்யன்பர்க் கருளுங் கண்க ணீண்டுகன்று விரவுபெருங் கருணை நல்கப், பராகமுறு விம்பநறுங் கனியே யென்னப் பவளவள வாயதர மழகு வாய்ப்ப, வராகனிடை கண்டுநிறை காதொ ளுத மாறிலாப் பொன்னோலை குழையின் மல்க.(௪௧)

* இனிதிருத்தல்—சுகாசனத்திருத்தல்.

திருவடியி னிரத்திநூ புரகின் ஞர்ப்பச் செங்கழுநீர் சண்பகந் தண் கருநேன் றேய்தன், மருவளர்மா லிகைமார்பி லங்கச் செம்பொ ன் மாசிலுடை யுத்தரிகம் வனப்பு நல்க,வருள்வடிவா யினிதமருந் தே வி தன்னை யாயிரங்கண் ணன்முதல்விண் ணவர்தாழ்ந் தேத்தப்,பரு வமுகிற் குழல்விசயை சயைமுன் ஞன பாங்கியர்பூ சிப்பமகிழ்ந் துறை வா ளென்றும். (௪௨)

சந்திரகலே போலொளிருந் தேவி தன்னைத் தனிப்பிரம ரந்திரத் தா யிரம்பைந் தோட்டுக், கந்தமலி பதுமவா சனத்தி னுள்ளங் கரு தியுறை யருள்வடிவந் தியானஞ் செய்யின், முந்துகவி வாணரென வாக்குண் டாகு மொய்யொளிப்பொன் னிறமாக விதையத் தெண் ணி,னந்தலில்வெம் பாவமெலாம் விட்டு நீங்கு நவிவுதரு சத்துருக்க ளுச மாவார். (௪௩)

சத்துருவா வுளவுச்சா டனமுன் ஞகச் சாற்றியவெண் கருமமும் போய் நாச மாகுஞ், சித்திரரத் தினசிங்கா சனத்தின் மேவுந் தெள்ள முத மயவடிவாந் தேவி தன்னைப்,பத்தியொடுந் தியானிக்கில் வாக்கின் மேவும் பைங்கருப்பஞ் சாறமிர்தம் பசுந்தே னின்ன, வொத்திருக் குங் கவிதைகங்கைப் பிரவா கம்போ லுதித்துலகெங் கும்பரவு முண் மை மாதே. (௪௪)

கடைக்கணரு ளாற்படைப்பன் கமலன் கண்ணன் காப்பனுல கனைத்துமுருத் திரனந் தத்திற், றுடைப்பனிவள் பெருமையெவ ரு ரைப்பார் மூன்று தொழிற்குமுதற் காரணிமா மாயா சத்தி,யுடைப் பொருளீங் கிவளெனவோர் பண்போ தேனு முள்ளத்திற் பாவனை செய் திருக்கிற் றீமை, யிடைப்படியார் திரைக்கடல்சூ முலகூக் கெ ல்லா மிவர்தாமே யதிபதியா யிருப்ப ரொன்றும். (௪ரு)

பெருங்கயிலை நடுவினிற்கற் பகநன் னீழற் பிறங்கிரத்ந சிங்கவா ச னத்தின் மீதே,மருங்கின்மனோன் மனியான தேவி தன்னை மனத்தினி ற்பா விப்பவர்புண் ணியசொ ரூபர், நெருங்கியசெல் வத்தினரு ம வரே யிந்த நீணிலத்தி லிருந்திடுமவ் வளவு கால, மருங்கொடும்பா வ மும்பயமு மிலையந் தத்தி னவள்பதத்தி லுறுவரிதற் கைய மின்றால்.()

பரசிவனே ரிடப்பாக மேனி யாகிப் பரையாகி விளங்கியமுக் கண் ணி தன்னை, விரசுறமெய்த் திடபத்தர் விமல மாகு மிக்கபெருங் கயி லையிற்சென் றடைவ ரங்க, ணரசிருக்குந் தேவியனுக் கையினைப்

பெற்றே யன்பினரவ் வாலயத்தி னுள்ளிற் செல்வார், பிரசமலர்க் குழலாயிங் கிவற்றி னுள்ளிற் பிறங்கிரண்டா மாவரணம் பேசக் கேணீ. (சஎ)

கோடியோ சனையகல மதனிற் பாதி கூறிடுவர் மதிலுயர்ச்சி யதிற்பி டத்தி, ஞடியதொல் லறத்துருவா மிடப தேவர் நயந்திருப்ப ரவருயர்பைம் பானி லிக்க, நீடியவா ளவையுமவ் வளவாம் பீச நீளமைம்பா னுயிரமோ சனைகோ சந்தான், றேடியயோ சனையாமோர் நிலக்கீள்ளுஞ் செப்பிலொவ்வொன் ருேரிலக்கங் கோட்டி னீளம். (சஅ)

காலினீ ளமுமிருபா னோந்தி லக்கங் காதுமொவ்வொன் ருேரிலக்கங் கழுத்துக் கூறி, னேலுமுயர் பைம்பானு யிரமா மூக்கு மியம்பிடுமத் தொகையகலங் கண்ணுஞ் சொல்லுஞ், சாலுறுபல் லொவ்வொன்றி னிடத்தைச் சாற்றிற் சகத்திரமைந் தாமிடப தேவர் மூச்சின், பாலுறுகாற் றிற்றனிமா மேரு வாதி பனிவரைகள் கடல்கண்டு நடுங்கு மன்றே. (சகூ)

வெள்ளிவரை யிஃதெனவே மேனி யெங்கும் வெண்மைநிறம் பொங்குமவ ருங்கா ரத்தாற், றள்ளரிய பிரளயகா லத்து வாயுச் சஞ் சலமுற் றொடுங்குமதி பெலமோப் பின்ரு, மெள்ளருந்தம் வேகத் தான் மனவே கத்தோ டியைவாயு வேகத்தைச் செயிப்பர் சேந்த, வள்ளிலோா நுதிமூக்கி னுதியிற் சேர்த்தி யசையிட்டாங் கிருப்பார்கண மனேகர் சூழ. (ருo)

எழுதரிய நால்வேதம் பாதந் தூய விமற்றரும மேனிமுகம் பனையே நாதம், பழுதகலு மிருசிருங்கம் விந்துக் கண்கள் பகர்குடிலை வளர்கன்னம் பாவ மண்டங், கெழுதருவா றிரோதையதா மிடப தேவைக் கிளர்தருநெஞ் சினிலுருவந் தியானித் தேத்தி, லொழிதரும்வெம் பஞ்சத்து ருநாச மாவ ருறுஞ்சீல சித்தியுஞ்சத் தியமீ துண்மை. ()

பத்தர்களா மனைவருக்கு நன்மை செய்தே பாங்கிருெடு மாங்குறையு மிடப தேவைப், புத்தியுற வீழ்ந்திறைஞ்சி யனுக்கை பெற்றுப் புகழ்ந்தன்ப ராலயத்தி னுள்ளிற் செல்வார், முத்தநகை வினமினாகே ளிவற்றி னுள்ளின் மூன்றுமா வரணமும்யோ சனையோர் கோடி, யத்தினிடை மதிலினுயர் பிலக்க மைம்பா னதிலாதி சண்டேச ரமர்வ ரொன்றும். (ருஉ)

விளங்கியகே தனங்கள்கொடி யாடை முத்து மேற்கட்டி யிவற்றினலங் கரிக்கப் பட்டுத், துளங்கொளிய பூவளத்தா ணிறுவிச் செய்

ய தூயமா ணிக்கமதில் செய்து மிக்காய்க், களங்கமறு நாளுவத் து க்கு ளோங் கிரிரவி யொருகோடி யுதித்தா லென்ன, வளங்கெழு மா ளிகைகண்மணி மண்ட பங்கண் மன்னியுறை யிடங்கள்பல வி ன்னுஞ் சொல்வாம். (ருங)

சந்திரகாந் தங்கள்குளிர்ந் தமுது பில்கத் தளவிசைகள் செறித்து நவ மணித்தூ ணட்டி, விந்தைசேறி தருசுவரு மவற்றாற் செய்து மேன்மைபெறு மாணிக்கக் கொடுங்கை சேர்த்து, நந்தவிள லுசித மா மணியின் பாவை நாடகஞ்சேர். மண்டபங்க ணடுவ ணோங்கி, யந்தமுறு செம்மணிவே திகைய னேக மதிசயமா விளங்குமவ்வா வர ணந் தன்னில். (ருச)

பரவுசிவ காரியங்கள் பரிக்குந் தூய பண்புடையா ரடைந்தவர் வெம் பவங்க ணீக்கி, வரமுதவும் பெருமையினூர் கருணை யோங்கி வளராதி சண்டேச ராங்கு மேவித், திரமுறவே யிருப்பர்சிவ கணங் கள் பல்லோர் செறிவொமு கன்னியர்க ளெக்கை சாத்த,னுரவுசெறி யட்டவயி ரவரனேக யோ கர்சன காதியராங் குறுவ ரின்னும். (ருரு)

ஆரணர்நா ரணர்செறியிந் திரா னேக வாயிரகோ டியரளவி ட் டறிய வொண்ணுக், காரணமா முனிவர்சிவன் கருணை நல்குங் காலம்பார்த் திமையாநாட் டத்தோ டங்ஙன், பூரணமாம் பரம்பொ ருளைத் தியானித் தேத்திப் பொங்குமல மகன்றிடுவா ரிருப்பார் கொ ங்கை, வாரணிகே ளித்தனையா யிரங்கள் போன வருகற்பம் பிரளய மென் றறியா ரன்னோர். (ருசு)

சண்டேச ருலகறிடப் பெறுவோர் தாமே தருமத்தி னுயர்ந்த வர்மெய்த் தவத்தின் மிக்கோர், வண்டேயு மிதழியந்தார் வேணி யுன் பு வழங்குதற்குப் பாத்திரமு மாவ ரால், வங், கொண்டேயு மத்தேவை க் கும்பிட் டன்பர் கூறரிய வனுக்கைபெற்று லயத்துட் செல்வார், பண்டேயு மொழிமடவா யிவற்றி னுள்ளிற் பக்ராலா மாவரணம் பகரக் கேணீ. (ருஎ)

ட நந்தீச ருறைவர்சிவ கணங்கட் கெல்லா நாயகமா வக்கணங்கள் சூழ்ந்து போற்ற, வந்தீசன் றனக்கிரண்டா மீச னென்ன மழுவுமை பொன் மணிப்பிரம்பு சுரிகை தாங்கித், தந்தீச னுதவுபிறை வேணி யோங்கத் தந்திபுலி யுரியுடையுத் தரிக மாக, விந்தீசன் போன்றுபிர சன்ன மாகி யெழில்வதனந் தொழுபவர்க்குக் கருணை நல்க. (ருஅ)

கந்தரத்தில் விடமிலங்க வக்க மாலை கவின்பெறமுத் தாரவட மார்பின் மல்கச், சுந்தரநெற் றியிற்றிரிபுண் டரவெண் ணீறு துலங்கிடச்சா மளவல்லி யிடப்பான் மேவ, வந்தரத்தர் யோகர்நறு மலரிட் டேத்த வருமறையா கமந்துதிப்ப வவைகொண் டேதாஞ், சிந்துரத்தி னுரிபோர்த்த சிவனைச் சிந்தை செய்திருப்பர் நித்தியதத் துவம் பெற் றோங்கி. (ருக)

அந்நுறையுஞ் சிவராச தானி தன்னி லாதிசிவ கணத்தோடு மிருப்ப ரந்த, வுரனுறுமா வரணவிரி யிருபத் தைம்பா னுரைத்திடும்யோசனையிலக்க மிலக்க மைம்பான், பரவுமுயர் பயன்மாலெல் லோருஞ் சொல்லும் பரனனுக்கை யின்றியப்பாற் செல்லக். கூடா, விரவுறு மெய் யன்பரத்தே வனுக்கை பெற்றே விமலனுறை யாலயத்தி னுள்ளிற் செல்வார். (சுo)

மருமொய்த்த பூங்குழலா யிவற்றி னுள்ளின் மன்னுமைந்தா மாவரண மகலங் கூறி, லிருபத்தைந் திலக்கம்யோ சனையாந் துங்கமியம்புமறைக் கோடிபத னடையா ளத்தைச், சொருபத்தை யின்னபடித் தென்றுங் காணார் தூமறையா யிரமுகத்துச் சேடன் மாயோ, னிருமித்த சிவனுமையா ணந்தி தேவர் நிகழ்த்தியவிம் மூவருமே யறிவர் நீங்கார். (சுக)

அம்மையுமை யொடுமீசன் விளையா டற்கே யாடிடமா வமைத் தசிவ ராச தானி, யும்பர்தொழு மதற்கிணவே றியம்ப வொண்ணு வுரைத்திடுமவ் வாவரணத் துள்ளி லந்த, நம்பனுறை தருமந்தப் புர மொன் றுண்டு நாற்கோடி யோசனையா மகலஞ் சூழ, வம்பவிழ்பூ நந்தனமா வனங்க ளோடை வாவிகிண றமிர்தநதி யனேகம் வைகும்.

சிந்தித்த துதவுசிந்தா மணியா லொளிக்கத் திண்ணியமால் வரைகள் பல வவற்றின் மீதே, வந்தித்த பொன்மயமாந் தருக்கண் மல்கும் வகுத்திடிலொவ் வொன்றினுயர் பிலக்கஞ் சொல்லும், பந்தித்த யோசனையத் தருக்கள் பூவும் பலங்களுமம்பைந் தளிர்களுமென் னாளும் பல்கி, யந்தித்த பணைகவடு சாகை போக்கி யமைந்துதழைத் திடுமொருபா லனேகங் கோடி. (சுரு)

பதுமரா கத்தருவிந் திரநீ னிலப் பைந்தருப்பன் மணித்தரு வெவ் வேறு நானு, விதமுறுமென் றுகிர்த்தனிர்மா ணிக்கப் பன்னம் விளங்குதரு மலரொருபாற் கனிக ளோர்பாற், புதுமைதருந் தருப்

பூவி னிதழின் பேதம் பொங்குநிறத் தருவிரதங் கனிகண் மல்கி, யா
திகாசந் தருந்திருவாங் கனேக கோடி யான்றமணி மண்டபங்க ணடு
வி ளேங்கும். (சச)

புகலுறுமத் தருவனத்து ணடுவிற் றூய பொன்மயமா கியசீபங்
கதலி புன்னை,மிகலுறுசண் பகமகிழ்மா தனேப லாசு மிக்கமா விருச
நறு நரந்தந் தால, மகவிடமெர் கும்புகழ்நன் னுளி கேர மாலரசு
பச்சிலைமல் லிகைநற் சந்தந், தொகலுறுநாண் மலர்ச்சிறுசண் புகம்
வா னேங்கித் தூமலருங் கனிகளுமென் னாளு நல்கும். (சரு)

மற்றுமுள பல்வளங்க ளனேக மாங்கண் வைகியதி சயம்விளை
க்கு நானு பேதத், துற்றிடுபுள் ளினமிருக மார்ப்பி னெங்கு முறும
வையி னவமணிப்புள் ளொளிரும் பொற்புண், முற்றியபன் னிறச்சி
றைப்புள் ளனேக மோர்பான் மொய்த்திடும்வால் செவிகளுமங் நிற
மே யாகத், துற்றமிரு கங்களுமங் நிறமே முற்றுந் தோய்ந்தமிரு க
ங்களுமாங் குறைபு மோர்பால். (சசு)

மாணிக்கக் களிற்றினங்கள் பிளிறு மோர்பான் மயில்குயில்
பொற் சாதகங்க ளொலிக்கு மோர்பால், வேணிக்கந் தரன்கயிலை ய
க்கி ரத்தில் விளங்கிடுமிவ் வளத்தொடுமவ் வனமற் றுங்கே, பூணிக்
கு மாசையின்மாப் பிடியைத் தந்தி பொருந்துதல்கண் டவ்விறைவ
னிறைவி யோடும், பாணிக்கு மவ்வுருவாய்க் கூடி வேழப் பனைக்கை
முக விநாயகனை நல்கி னனே. (சஎ)

கூறியநந் தனவனத்தின் பெருமை யாரே கூறுவரிம் மரக்கோ
ட்டி னுனிக்கொம் பிற்கே, மாறகலிந் திரனுடைநந் தனங்கு பேரன் ம
ருவுசயித் திரவனமு மொவ்வா தங்ஙன், வீறியபோ டைக்குயர்பா
ளாழி யொவ்வா மேனிலமே டைக்கொவ்வா மேருத் தீவந்,தேறியமி
ன் னேமற்றை வனத்திற் சியஞ் செப்புமிதிற் சிறுமுயற்குட் டிகளுக்
கொவ்வா. (சஅ)

ஈசனுக்கு நிகர்தேவுந் தொகுத்துச் சொன்ன விருங்கயிலைக் கி
ணைவரையு மிலையீ துண்மை, பேசுறுமவ் வனத்தினடு வயிர்த வோ
டை பிறங்குமவ்வோ டைக்கரையிற் பொன்னி னீபந், தேசுறமாக்
கதலிவனர் நாளி கேரஞ் செழுங்கமுகு சூழ்தரவங் கடுவண் வைகும்,
வீசபெரும் பரஞ்சோதி வடிவ மாகி மிக்குயருஞ் சபைமூன்று விள
ம்புங் காலை. (சகூ)

ஞானவடி வாயிருக்குஞ் சபையைச் சூழு நலந்தருமே ழாவர ணம் வாயி னுன்கு, மானமுறு சிவகணத்தர் வசிகர் காப்பர் மன்னி யபூ ருவத்திரசி தசபை நீண்ட, பானல்விழி யாய்வடபா லம்பொன் மன்றம் பரவுமிரத் தினசபையீ சானத் தாகுந், தானமது மிளிர்கரூ டப் பச்சை யாதி தாவின்மணி யால்விளங்கிச் சோதி யாகி. (எ0)

முத்தியளித் திடுபரமா விசால மாகி முயங்குமிரத் தினசபை யின் முதல்வி காணச், சித்திதரு சிங்கார நிருத்தஞ் செய்யுந் தெளி வுடையோர் கண்டுதொழுஞ் செம்பொன் மன்றி, லத்தன்மகா சதா சிவநன் னடனங் காட்டு மாதியிர சிதப்பொதுவி லதிர வீசி, நித்திய மாஞ் சதாசிவநாட் டியத்தைக் கூட்டு நிகழ்சபையின் பெருமையெ ம்மா னிகழ்த்த லாமே. (எக)

புதியநறு மலரின்மண மெங்கும் வீசப் பூமலர்த்தா தளைந்துகு ளிர் வந்து வீசத், துதிசெயுமா மஞ்ஞைகுயில் செவியி னேறப்பத்தும் புருநா ரதர்வீணை கானம் பண்ணப், பதியெனுமா பரனடிக்குஞ் ச பைகண் மூன்றும் பண்புறவே விளங்குமவ ணந்தி தேவ, ரதிகவிற ற் சிவகணங்கள் சனகர் யோக ரரியயனிந் திரன்முதலோ ரருச்சித் தேத்த. (எஉ)

நவ்விவிழி யாயுயர மிலக்க மைம்பா னவின்றிடும்யோ சனைபதி னன் கிலக்க மாகிச், செவ்விபெறு திருமேனி யகன்று கோடி செங் கதிர்ப்பே ரொளியம்பொன் விமான மீதி, லவ்வியந்தீர்த் துறையுமகா சதாசி வந்தா னுதிவெளி விளைந்தருளே பழுத்துத் தானே, யெவ் வமின்மே லெவற்றிற்கு மேல தாகி யிருங்களியே விளைந்தெவர்க்குங் காணொ ணாதாய். (எங)

ஒளிவிளையு மெய்யன்பர்க் கருளின் றாய வானந்த வொளிவிளங் கு முதங்க ளையைந், தெளிதென்வெண் ணருஞ்சூல முதல தாங்கு மி ணையிறிருக் கரங்களொம்பான் கண்கண் மூன்றுந், தெளிதரப்பெற் று ளதுபிறை முடிக ளோங்கச் செம்மணிப்பூ ணணிந்திரவி கோடி யென்ன, மிளிருநவ மணியரியா சனத்தின் மீது வேதநெடு மாலருச் சித் திடவே மேவும். (எச)

தருமசரு மாவிவற்றைப் புகலக் கேட்குந் தையல்புகல் வாடவத் தோ யயன்மால் யோக, ரருமறையா லளந்தறிதற் கரிதா யோங்கு மாதிசபை யினிற்புரியு நிருத்தன் றன்னை, நிருமலையா மளவல்லி நீங்

கலாக நிகழ்த்துதிமற் றையர்தெரிசித் தவரின் னேரென், றொருமை பெற வினவுதல்கேட் டுரைசெய்வாமென் றுரைசெய்வா னம்முனிவ ன் மனைவி கேட்ப. (எரு)

மாசதா சிவநடன மம்மை காண மகிழ்விநெனும் புரிந்தருளி ய நேகங் காலங், தேசதா மெனவுறையு மண்ண லந்நாட் செங்கண்மா ன் முதலியர்நன் னடனங் காண்பா, ராசைதாம் பெரிதாகி யிந்நாள் காறு மருந்தவஞ்செய் குனர்தெரிசித் திடுவிப் போமென், றோசை தாழ் திருவுளத்தி னுன்ன வன்னே ருற்றனர்ஞா னக்கணவர்க் குதவி ஞானல். (எசு)

வேறு.

ஆங்கவர் காணப் புரிந்திருத் தத்திற் கியையவா ஞுசுர னகிலத், தோங்கிய வதரு வணமறை விதியா லொலிமிகுங் குடமுழா வதிர்ப் பப், பாங்கொடு நெடுமான் மத்தள முழக்கப் பங்கயன் றாளமொத் தி சைப்ப, வாங்கரும் பானு கம்பனு யிரஞ்செவ் வாயினாற் சங்கெடுத் தொலிப்ப. (எஎ)

மூவிரு பாதன் சதசிர சேனன் மொழிதரு கணேசரிங் கிவர்க டாவரு மொலிசேர் தமருகம் விதியின் சதியின்வா சிப்பவர்க் காக்கன் மேவரும் பேரி வாத்தியங் கொட்ட வேணுகம் பனரிசை யிழற்ற வேவரும் பரவு மங்கிலர் கும்போ தரரிருங் கொம்பெடுத் தூத. (எஅ)

நந்திமா தேவர் பொற்பிரம் பெடுத்து நாட்டியச் சபையினுர்ப் படக்கிவந்திடு மிமையோர் குழுவினைத் தத்தம் வரிசையின் முறைமு றை நிறுவி, யிந்துவே ணியனார் திருமுன்ன ருலாவி யிருமருங் கினு மெதிர் நடந்து, பந்தமாம் வினைதீர் சீர்த்தியை யெடுத்துப் பகர்தரு ங் கட்டியம் படிக்க. (எகூ)

மற்றைய கணங்க ளிற்சிலர் வீணை வாசிப்ப வவர்களிற் சில வர், துற்றிடு மற்றைத் தமருக முதல வாத்தியத் துழனியார்ப் பெடுப் பக், கற்றையங் கூந்த லரம்பையர் கமலக் காலிற்கிங் கிணிசிலம் ப ணிந்தே, யுற்றவே ழிசையின் கானவா ரமுத மொண்குழைச் செவி யினின் வார்க்க. (அ0)

சாமரங் குடைபா வாடைநீள் விருது கொடிசில தையல ரெடு ப்பத், தோமறு சந்தக் குழம்புகொண் டிமையோர் தொழச்சில தோ கைய ரிறைப்பக், காமரு தூப தீபத்தட் டேந்திக் கன்னியர் சிலர்ப

னி மாற, மாமறை விதியான் மங்கலம் பாடிப் பலாண்மொ தரிற்சி
லர் கூற. ( )

விசையையே செயையாம் பாங்கிய ரோடும் வேழமா முகன்குக
னென்னு, மிசைபெறு மைந்த ரிருவர்க ளோடு மெம்பெரு மாட்டி
யுண் மகிழ்ந்து, நசைதரு கயற்கட் பார்வையி னுலு நலந்தரு புன்ன
கை யாலுந், திசையெலாம் பரவு திருநடம் விளங்கச் செய்துகெம் பீ
ரமே செலுத்த. (அஉ)

தெரிதரு பதினே ருருத்திரர் மற்றுஞ் செப்பிய வுருத்திர கண
ங்க, ளரியயன் மகவான் முதற்றிசைப் பால ரவரவர் கணங்கள்விண்
ணோர்கள்,விரிதவ முனிவர் சித்தர்க ளியக்கர் விஞ்சையர் சாரண ருர
கர், பரிவினே டிந்து சூரியர் வணங்கிப் பரமவா னந்தத்தின் மூழ்க.()

மற்றுள கிரக முடுக்களெண் வசுக்கண் மருத்துவ ரிராசிபுட் கலமா
நற்றுளி முகில்க ளேழிரு புவன நளிகட லேழுமா நதிகள் [வரைகண்
பொற்றுண ரோடை குளங்கிணறு ருவி புகலுமெண் கயங்கண்மால்
முற்றுறு மன்பா லானந்தத் தேனை முகந்துகண் வழியுளந் தேக்க. ()

ஐங்கரன் கணங்க ளறுமுகன் கணங்க ளாதிசண் டேசன்மா நந்தி
யெங்கணும் புகழ்துந் திலர்மகா வாகு வுற்பனர் கிரீசருன் மத்தர்
தங்கிய பிரேங்க ருற்சிலர் கணத்துட் சாற்றுகுண் டிகர்பணி சிரசு
துங்கவைங் கண்ண ரொழுகணர் பூத பசாசுவே தாளங்க டுதிப்ப. ()

வேதநான் காறு சாத்திரம் வேத சிரசொடா கமங்களு லேழு,
கோதிலா வுபவி டதங்கடோத் திரஞ்சூத் திரம்வியாக் கியானுங்கண்
மிருதி, யாதியீ ரொன்பான் புராணகா வியம்பர வந்தரா டகமலங்
கார, மீதெலாம் பரம வடிவெடுத் திறைஞ்சி யிறைநடந் தொழுது
வாழ்த் தெடுப்ப. (அசு)

அத்திரி விண்டு புலத்தியர் புலக ரங்கிராக் கர்க்கர்பார்க் கவர்மா
நித்திய வற்சர் குற்சர்கா லவர்நன் னிலைபெறு மிருகண்டு விசுவா [ம
மித்திரர் சுகர்மார்க் கண்டர்மத் தியந்தர் வியாசர்மாத் தேந்தினி வா
ரித்தனை பிரம விருடியர் கணங்க ளிறைஞ்சினர் குணலையிட் டேத்த.

கண்ணுவர் சங்கர் தெக்கர்சம் வர்த்தர் காத்தியா யனர்தொழு
தேத்தப்,பண்ணிசை வீணை நாரதர் முதலாந் தேவமா விருடியர் பர
வத்,தண்ணளிச் சனகா தியசிவ யோகர் தனித்தனி கண்டுதோத் திர
ஞ்செய், துண்மகிழ் சிறந்து நடனவா னந்தத் தேன்முகந் துண்டுகே
ண் களிக்க. (அஅ)

பம்பிய வெத துந்துபி முழங்கபீ பங்கயன் செய்தொழின் மயல் வம்பிகைதானுந் தாளமொத் திசைத்தே யரகர நடேசவென் றே த்த, வும்பர்நா யகர்பொன் வேணியின் சோதி யோங்கிய திகந்தமும் விளங்கி, வம்பவிழ் குழலா யுலகவான் மாக்கள் வல்வினை மலவிருள கற்ற. (அகூ)

சிற்சபை தன்னிற் சுற்றியே நடிக்குந் திகம்பரன் குஞ்சித பதத் திற், பொற்சிலம் போசை கேட்டுளோர் புளகம் பொலிசிவ மோக த்தி லழுந்தச்,சற்சிதா னந்தத் தாண்டவ ரசத்தைத் தனிவிடை ஞான கேத் திரத்தான்,முற்செலு மன்பிற் பருகியுள் ளுருகி முடிவிலற் புதத் தொடு மிருப்ப. (கூ0)

இத்திரு நடன வானந்தத் தேனுண் டியாவருந் திருத்தியை யடை ந்தார், மொய்த்தெழு வான்பூ மழையம்பொன் மழைநன் முழுநவ ம ணிமழை பொழிந்த,வத்தனு னந்தத் தாண்டவ ராய னனைவர்க்கும் கருணைசெய் தருளி, நித்தமா முத்தி யளித்திட வன்னோர் நிறைபரஞ் சோதியுட் புகுவார். (கூக)

அனேகமால் பிரம ரனேகமிந் திரரு மனேகமாம் விண்ணவர் முனிவ,ரனேகமா யோகர் சித்தரு மனேக மற்றும்விண் ணவர்குழாம னேக, மனேகமெய் யன்ப ரனேகமா தவங்கள் செய்தலா லனேகநீத் தேக, மனேகமும் பொருளி னிரண்டற வொன்றி யநாதிசீர் யுச்சிய மடைந்தார். (கூஉ)

மானினேர் விழியாய் தொழுதவெல் லோரும் விழுத்தரு முத்தி யை யடைந்தார், மோனமா யிருந்து நீயுமந் நடன மூர்த்தியைத் தி யானஞ்செய் திடுவா, யீனமார் பவந்தீர் முத்தியெய் திடுமென் றியம் பயான் றியானிக்கும் பொருட்டான், ஞானமார் சபையி னடமூர் த் தத்தின் பிரமாண நவிலெனக் கென்றுள். (கூந)

என்றவள் கூறத் தருமசுன் மாவங் கியம்புவா னீததி குய்யந், து ன்றுபூங் குழலாய் கற்பின்மேம் படுநீ வினயது சொல்லுதல் வழக்கா, லொன்றுமன் பினிற்கேண் மாசதா சிவந்தா னெப்பற நடித்திடு மம் பொன்,மன்றமாம் விமான மொன்றனைக் கோடி யோசனை யுயர்ந்த து மரபால். (கூச)

அகலமு முனைக்கு மத்தொகை வாயி லுயரமு மிலக்கமோ ரறு பான், புகலும்யோ சனையச் சபையினு ளிலங்கும் பொற்பொது மக

லமா றிலக்கம், விகலமொன் றின்றி யுயர்புமத் தொகையா மிரத்ந சிங் காசன மீதிற், சகளநிட் களமா சதாசிவ நடனம் புரிதருந் தைய லகண் டெவப்ப. (கரு)

செங்கதிர் கோடி யுதித்தென விளங்கித் தீக்கண்ணர் காணுதற் கரிதாய்ப்,பங்கயின் ஞானக் கண்ணினர் காண்டற் கெளியவாந் தனி ப்பரஞ் சோதி, யெங்குமா நிறையு, நிட்களஞ் சகளீ கரித்துநாட் டியம்புரிந் திடுமாற், றுங்கமா நடேச னுயரமு மைம்பா னிலக்கம் யோசனையெனச் சொல்வார். (கசு)

பாதமோ ரிரண்டு மிருபத்தைந் திலக்கம் யோசனை நீளங்காற் ப டங்க, ளோதுமைந் திலக்க நீளமா மரையி னகலமு மத்தொகை யு ரைக்குஞ், சோதிசேர் திருமே னியின்வடி வகலந் தோன்றிடு மே ழிரண் டிலக்க,நீதிசேர் கான கந்தர மிலக்க மிரண்டதாம் யோசனை நீளம். (கஎ)

அருள்பொழி முகத்தி னீளமு மிலக்க மிரண்டியோ சனையணி மூக்கின், மருளறு முயர்பு மயுதமா மலர்க்கை நீளமு மிருபஃதி லக் கம், தெருளுற வுரைக்கின் விரல்களி னீள மிருபதி னாயிரந் தெளியும், பொருளுடைப் புருரந் திருச்செவி திருக்கண் ணீளமும் புகலுமத் தொகையே. (கஅ)

இத்திற நடேசன் கேசாதி பாத பரியந்த மியல்பெற விளங்கு, முத்தம மூர்த்திக் கியைந்திட விமலை யுருவமும் பொலிதர விருக்கு, நி த்தமா மிடப*தேவர்நந் தீசர் நிகழ்சிவ கணத்தவ ருருவு, மத்தக விள ங்கும் புந்தியா லளந்து காணுதி யறைகுவ மின்னும். (கக)

இசித சபையாம் விமானமு மைம்பா னிலக்கமோ சனையுயர் பகலம், பரவுறு மதிசெங் கதிரோர் கோடி யுதித்தெனப் பல்லொளி பரப்புந்,திரமுற வுரைக்கு நிட்களந் தனை சகளமாய்த் திருக்கர மொ ருபான், வரமுறத் தோன்றத் திருநடம் புரியும் வனிதைநீ யதுமனக் கோடி. (க00)

வான்கதிர் கோடி யுதித்தென வொளிரு மிரத்தின சபைமணி வி மானந்,தேன்கமழ் குழலா யகலமு முயர்புஞ் செப்புமவ் விலக்கமோ ரைம்பா, னன்குதிண் புயத்தோ டுரைத்தநிட் களமே சிங்கார நடஞ் செயு முருவா,யூன்கெழு பவந்தீர்த் தருளுமிப் பொருளைச் சபையொ டு முள்ளத்திற் கோடி. (க0க)

ஓங்குமப் பொருள்சேர் கோடுமுடி விரிவு மாவர ணங்களு மு ரைத்தேம், பாங்குறுஞ் சத்துக் கோடியர் மாட மாளிகை யவற்றை ப்பண் புறச்சூழ், நீங்கரும் பரிதி காந்தமாம் பன்னோர் முடிநிக ழுரு த்திர ரிருப்பர், தாங்குமத் தொகைய ரவற்றைச்சூழ் நூற்றெட் டணி முடி சந்திர காந்தம். (௧0௨)

அவற்றினைம் பத்தோர் சத்திகள் பொருளுா லுணர்பவ ரானு ரூப் பெற்றோர், கவற்சிதீர் நவசத் திகளினை யோர்கள் கருத்துறச் சதாசிவப் பொருளை, யுவப்பொடும் பரவி யுறைகுவ ருவற்றைச்சூழ் முடி யாயிரந் தோன்று, நிவப்பழ னிறந்தாண் டவஞ்சத்த கோடி மந் திர முருப்பெற்று நிலவும். (௧0௩)

பகர்தரு மவற்றைச் சூழ்மோர் பதினு யிரத்தொரு முடியவை படிக, நிகரறு தந்தி முகன்குகன் சாத்த னிகழ்த்திய வினைசெயு மூவர், மகரவா ரிதிசூழ் புவிபுகழ் காளர் வயிரவ ணந்திபிங் கிருடி, சிகரமேர் கணங்க டிறற்சிவ குமாரர் தேனுமால் விடைபடைத் தூர்க்கை. ()

சத்திக ளினையோர் தவமுயற் சியினு லினிதிருந் தப்பதஞ் சரிப்பா ர், மொய்த்திடு மவைசூழ்ந் தொன்றுபெற் றிடுமோ ரிலக்கமா முடிம ணி மாபத்த, வைத்தமேற் றிசையில் வைகுவர் கோடி நாரணர் ம லத்தினீங் கிடுவார், சித்தசுத் தியினுற் றனிமுத லான சிற்பர மற பொரடும் வணங்கி. (௧0௫)

வடதிசைச் சிகரத் தளவிலாப் பிரமர் வைகுவர் முத்தியை விரும் பி, மிடையுமிந் திரர்க ளனேகர்கீட் டிசையின் விமலனைத் தொழு துட னமவார், படர்தரு தென்பா னெடுமுடிச் சிகரத் துறைகுவர் பாந்தெழு கணங்க, ளிடரறு தவத்தோ ரளவிலர் கருணை யெம்பிரா ன் றன்பத மிறைஞ்சி. (௧0௬)

பத்திலக் கத்தொன் றணைமருங் குடுத்துப் பைம்பொனின் விள ம்புமச் சிகரம், புத்திகூர்ந் தாங்க ளுருத்திர கணங்கள் பூதசே னதி பர் சித்தர், நித்தியா தரர்மா கருடர்கந் திருவர் மேவுவர் சூலமே முதலா, மெய்த்திடுங் கருவி சுரபிகன் மணிநீள் முழுநிதி மொய்ம் மலர்த் தருக்கள். (௧0௭)

ஏலவார் குழனற் கணிகைய ரீட்டு மிறையுருத் தரித்தவ ணிருப் பார், சாலுமித் தகைய கொடுமுடிக் கீழாய்த் தாவற நவிலவோர் திரு க்கும், பாலுறழ் வெள்ளிக் கொடுமுடி யவற்றின் பகர்தொகை கோடி

யொ டொன்று, மேலுற வவற்றிற் சரிப்பன யாவும் விதம்பெற வர
ன்முறை விரிப்பரம். (க0அ)

பிரணவத் துருவாய் விளங்கும்வெண் ணிறத்திற் பிறங்கிரண்
டாயிரம் வேழ, முராணுறு வேதப் பரிகணுன் முகற்கு முழுதளாந் தறி
ந்திட வொண்ணு, வரனொடு முறைவ தனேகமோர் தாள மூன்று
டைத் தூளின வான்ற, கரணுறு பொற்றைத் தாள்பல வுடைய தரு
ளிலக் கணங்கணக் கிறந்த. (க0கூ)

ஒருமுகத் தனவோ ரிருமுகத் தனமூன் றுடைமுகத் தன்முக மி
லாத, திருகுவெஞ் சிற்றக் கண்களுஞ் செறிந்த கைகளு மின்னண
ஞ் சிறந்த, மருவுவெண் பிறைபோ லெயிற்றன பிலம்போல் வாயி
ன செம்மயி ரினவாய்ப், பொருவருங் கணங்க ளளவில வின்னும் புக
லுவங் கணங்களின் பொலிவு. (கக0)

மானிடர் பறவை மதகரி முகத்த வரிப்புலி முகத்தவெவ் வழல்
வாய்க்,கானமர் நரிவெங் கரடிமா முகத்த கடியபல் விலங்குமா முக
த்த, வானபல் பூத மெண்ணில வமல னுணையி னியங்கியாங் கமர்வ,
தூநிற விமானந் தேர்பல பொருந்துந் தொகுத்தல்விண் ணவர்க்கும
ற் றரிதால். (ககக)

அப்பெருங் கயிலை மருங்குதித் துயர்ந்த வணிகிளர் கற்பகப்
பொதும்பர், வைப்புறு மண்ட மாதியந் தமுஞ்சூழ் மருங்கும்வீ
சியபணைத் தருக்க, ளொப்பற விளங்கு மாங்கவண் புதுநீ ரோங்கிய
நவநதி நண்ணு, முப்பரம் பொருளின் முதலுரு வேண்டி முழுத்தவர்
தவம்புரிந் திருப்பார். (ககஉ)

நீடுமித் தன்மை யாயமா கயிலை நெடுவரைக் கொடுமுடி யிலக்
கங், கோடியோர் பதிஞே ரிலக்கத்தோர் பதிஞே ராயிரத் தொருநா
றுங் குணித்து, நாடிய விருபத் தைந்துமென் றுரைப்பர் நவிலுமிக்
கயிலையின் றாழ்வின், மாடுசூழ் தரும்பொன் னிலமதிற் கணத்தோ
ருத்திர ராயிரர் வதிவார். (ககங)

ஆங்கவ ருறையுந் தமனியத் தளத்தி னளவையோர் கோடியோ
சனையா,நீங்கரி தாமத் தமனியத் தளத்தை நிலைபெறச் சூழ்ந்துகொண்
டிருக்கும், பூங்கதி ரொளியாற் கதிரொளி யகற்றும் பொற்பொடு மி
னிறுற விளங்கித், தாங்கரும் வெள்ளி மதிலுமேத் திருக்குந் தமனிய வி
ஞ்சியொன் றுளதால். (ககச)

துன்னிய கோடி ஃயோசனை யகன்று தொகுத்திடுங் கோடியிற் கோடி, மன்னியே யூடு போகிமேக் குயர்ந்து வளர்ந்தன வானுற வோங்கி,மின்னுகோபுரங்க ளெட்டுள வவற்றின் வாயிலின் மேவியே காப்போ, ரின்னரென் றவரைப் புகலுதல் செய்வாங் கேட்டியென் றியம்புவான் முனிவன். (கக௫)

ஐங்கரன் றிகழ்பூ ருவதிசை வீர பத்திர னழற்றிசை தென்பாற், றுங்கமா நந்தி வயிரவன் றென்மேற் றுலங்கிய மூலைமேற் றிசையிற், றங்குவேற் குமரன் வாயுவின் றிசையின் வயிரவி சாற்றிய வடக்கி, னுங்குமா காளர் சாத்தனீ சானத் துறைந்துதங் கணத்தொடும் புரப்பார். (கக௬)

இயம்பிய விவற்றுறை வளைந்துகு மூரண மொன்றுள வினமணிக் குலங்கள், வயங்கொளி விளங்கி வானுற நிவந்த வன்மனத் தரக்கர்வல் லசுரர்,முயங்கியே சேறற் கரியதாய்ப் பிரள யஞ்செலற் கருமுழுக் காவல், வியன்பெருங் கயிலை நிலையிது புகன்றேம் விமலனோ டிதுமனக் கோடி. (கக௭)

வளப்பெருங் கயிலை வண்மையு மூன்று மன்றமு நடேசன்மா வடிவு,மளப்பரி தெவர்க்கு மவனரு ளதனா லறிந்தவா றியம்பின நடேசன், இளப்பரும் பஞ்ச சத்திகட் கருளிச் சுவேச்சையா யுறுங்கிள ருருவி, னுளப்படு முரோம மொன்றிற்பல் கோடி யண்டங்க டோன்றி யே யொடுங்கும். (கக௮)

மலாயன் றிருமா லிந்திரல் முதலாம் வானவ ரவனரு ளடைந்து,நிலைபெறுஞ் செல்வ மெய்தின ரவனை நிகழ்த்துமால் கண்மலர் சாத்திப்,பலர்புகழ் சுதரி சனப்பெயர் படைத்த சக்கரம்பெற்றன னெவனோ, லலைவறு மவனை யளந்தவன் வடிவம் வருணிப்ப தியாவர்க்கு முடியா. (கக௯)

ஊன்மதுப் புசித்த வேடன்பூ சித்தே யுயர்தரு முத்தியை யடைந்தா, னுனவற் குதவு வானெவ னவனை யடைவிற்றன் சரிதையைக் கேட்போர், வானமும் பரவு சிவகதி யடைவார் வந்தருள் வானெவ னவனைப், பான்மைசே ரண்டப் புரவிரோ மனைப்பல் விதத்தினும் வருணித்து முடியா. (க௨0)

இத்தக விளங்கு நடேசனைக் கயிலை யுச்சியி னிருப்பதாய் நினைப்போர்,பத்தியா யீசன் நந்தி யிருந்து பரவுமிக் கதைபடித் திடுவோ

ர், வித்தகக் கதைகேட் பவர்பவ மகன்று விமலமா கயிலையை யடைந்து, நித்திய போகந் துய்த்திரண் டற்ற நேயமா முத்தியை யடைவார்.

என்றுமா தவத்துத் தருமசன் மாவங் கியம்பலும் வினமிளை கேளா, நன்றுநன் றென்று கசிந்துள முருகித் தியானித்து நன்மையை யடைந்தாள், வென்றிமா தவத்தீ ரத்தக முனிவன் விளம்பிய வாறுமக் குரைத்தேம், தொன்றுமா கயிலைச் சபையொரு மூன்றுஞ் சூக்கும மாக்கியே சொக்கன். (கஉ௨)

கடனவிக் கிரக மாகிய தனேயு நவிலருஞ் சூக்கும மாக்கி, யடைவினப் பொதுவி னுவந்துதா பித்தே யமுதலிங் கத்தினி ஞனன், கடவுல கேத்து மதுரைபூ லோக சிவலோக மாகயி லாயந், திடமுற வுரைத்தேஞ் சத்திய மென்றே செப்பினன் மலையமா முனிவன். ()

ஆருவது மகாகைலைமான்மியமுரைத்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௩௭.

---

ஏழாவது

## தேவியறம்வளர்த்தவத்தியாயம்.

வினவு மாதவர் மீளவும் வினவுவார் மெய்த்தமிழ் முனித்தேவே
நனிவி ரும்புவே தாகம முதலிய விண்ணவர் கடங்காணப்
புனித சுந்தரன் புரிதிருத் தத்தைநீ புகலக்கேட் டுளம்வாழ்ந்தே
மினிய மாதவப் பயன்சிவ பத்தியு மெய்தினேங் கதிபெற்றேம். (க)

அன்ன தாயினு மின்னுமொன் றுரைக்குது மாலவாய்ப் பதிதன்னின்
முன்ன மம்பிகை யறம்வளர்த் தனளென மொழிந்தனே யதுகேட்டே
கன்னி பாகன்ற னருளினு லங்கயற் கண்ணிநா யகியங்காண் [ங்
மன்னு முப்பத்தி ரண்டறம் வளர்த்ததை வகுத்துரை விரித்தென்று

இந்த வாசகங் கேட்டலு மகத்திய னியம்புவான் முனிவீர்காள்
புந்திகூர்தரக் கேளுமின் புகலுவாம் பூருவ கதைகேட்போர்
முந்தை வல்வினை நீங்கியே சிவகதி முற்றுவ ரிஃதுண்மை
சிந்தை செய்குதி றொன்றவ ருளங்கொளத் தெருளுற வுரைசெய்...

வேறு.

ஆதி நாளினிற் சோமசு ந்தரமுதற் கடவுட்
சோதி தோற்றமெற் குரையெனச் சுந்தரி வினவ
நாத னங்கணிற் றோன்றியே நாள்வரி லொடுங்கும்
பாதி மாதுகே ளெனவிளை யாடலைப் பயில்வுான். (ச)

வீரன னாவிய கயிலையி லானைமர் துமையா
டேன னாவிய மலர்க்கையாற் றிருவிழி புதைத்தா
ளான காலையி லிருட்பிழம் புருக்கியம் புவியு
மேனை யாவையும் பூசின வாமென விருண்ட. (ரு)

நீல மாமலை போற்கறுத் தனகெடு வரைகண்
ஞால மேழ்புகழ் யமுனைபோற் கறுத்தன நதிகள்
சீல மாதவ முனிவர்மே தகுபுவித் தேவ
ரோலுந் தத்தமா தவமுநன் னியமமு மிழந்தார். (சு)

கண்பு தைத்தகை திறக்குமுன் கணமவர்க் குலகிற்
கெண்பு தைத்திடும் யுகங்களு மெண்ணில சென்ற
பண்பு றுத்திடு மன்னவ ணிலைமையைப் பாராத்
தெண்க டற்கடு மிடற்றினன் றிருவுளங் கறுத்தான். (எ)

கறுத்த கண்டனுட் கறுப்பினைக் கவுரிகண் டறிந்தாள்
சிறுத்த குற்றநீ பொறுத்தியான் செய்தது பிழையா
லுறுத்து மிப்பவந் தீர்வழி யுரையெனப் பணிந்தாண்
மறுத்த லாத்திலன் கருணைசெய் தருளியே வள்ளல். (அ)

எத்த லத்தினுந் தீர்வுறா திப்பவஞ் சிவன்
முத்தி மாநக ரடைந்துமுப் பானிரண் டறமும்
பத்தி கூர்ந்துநீ புரிந்தெமை வழிபடிற் பாறும்
புத்தி யீதென விடைகொடுத் தருளனும் பூவை. (கூ)

என்ன மாதவஞ் செய்தன ளியற்றமிழ் மதுரை
தன்னி னல்லறம் வளர்ப்பதற் கெனமினாந் தளிர்த்தா
ளன்ன செய்குவ லென்றா னடியிணை யிறைஞ்சிப்
பொன்னின் மானமீப் பொலிந்தன ளத்தலம் புகுவாள். (கo)

வேறு.

விசையை யேசயை சண்டி மெல்லிய
லசையின் மங்கலை யருகு சூழ்வரத்
திசைவி ளங்கறத் தீர்த்த நன்னிய
ரிசையுந் தேவமா முனிவ ரெய்தவே. (கக)

பணங்கொள் பூதலஞ் சிறப்பப் பல்சிவ
கணங்க டேவருந் துதிக வித்திடக்
குணங்கொ ளன்பர்சென் றெதிர்ந்து கும்பிட
மணங்கொ டென்றிசை வழிக்கொண் டேகினாள். (௧௨)

கங்கை சூழ்தரு காசி யெமுத
லங்கு முற்றுள தலங்க ளியாவையும்
பொங்கு மாசையாற் றொழுது பூம்பொழின்
மங்கு றோய்பருப் பதம்வ ணங்கினாள். (௧௩)

முத்தி நல்குபொன் முகலி சூழ்ந்தகா
ளத்தி யானதென் கயிலை யீசனைப்
பத்தி யாற்பணிக் தேத்திப் பாங்கர்சூழ்
மெய்த்த லங்களும் விரைந்து போற்றினாள். (௧௪)

கம்பை பாலிசூழ் காஞ்சி யானவே
கம்ப மேவுமே கம்பர் தாள்களை
யம்மை முன்புபோற் போற்றி யாங்கெழா
வம்பெய் வேணியா ரருள்பெற் றேகுவாள். (௧௫)

பொன்னி நாட்டுள தலங்கள் போற்றிச்சென்
றென்னை யாளுடை யிறைவி யாலவாய்
மன்னு மாசையால் வழிக்கொண் டேகியே
கன்னி நாட்டினிற் கடிது செல்கின்றாள். (௧௬)

கதிர்த வழ்ந்தெழுங் கதம்ப கானத்தை
யெதிர்ப ணிந்துசென் றேத்தி யன்பினான்
முதிர்த லந்தரு மூத்தி மாநகர்
மதுரை யெய்தினாண் மதுர வாய்மையாள். (௧௭)

வேறு.

பாவின் மென்மொழி விமானகின் றிழிந்துதன் பரிசனர் புடைசூழச்
சூல தீர்த்தப்பொற் றாமரை யொடுசிவ தீர்த்தமுந் துளைந்தாடி
மூல வஞ்செழுத் தோதிநீ றணிந்துதம் முதல்வனு ருறைகோயில்
காலி னல்வலஞ் செய்திலிங் கத்தினைக் கண்டுகண் களிகூர்ந்தாள். (௧௮)

துதித்த ருச்சனை செய்துதாழ்ந் தெழுந்துதம் பரிசனர் சூழ்ந்தேத்த,வுதித்தெ ழுந்துமெய் யன்பினு லனுக்கைபெற் றுவந்துதா னுறைகோயிற், கதித்தி றம்பெறு சந்நிதி யணுகியங் கயற்கணு யகிதன்னைப், பதித்த மெய்யன்பிற் பணிந்தனள் விசயையைப் பார்த்திது பகர்கின்றாள். (௧௯)

ஆதி மூலமாம் புரையிவள் கலையிலா யிரத்தினி லொருகூறு
சோதி சேர்கயி லையிலிருந் தனனருட் சோதியு மிதபோது
நீதி மாதுநீ காணெனத் தர்ச்சனி சுட்டிநே ரிழைகாட்டக்
காத லான்மற்றைப் பாங்கியர்தாமுங்கண்டருச்சித்துக்களிகூர்ந்தார்

சோதி நாயகி மூவிரு சத்திக்கு மேலதாய்த் தொழினல்கு
மோதி நாயகி பரம்பரை நாயகி யாலவாய்ப் பதிமேவு
நீதி நாயகி யங்கயற் கண்ணியா ளிமலநா யகிமுன்ன
மோது மாதவஞ் செய்தன னறஞ்செயற் கெனவிச யையைநோக்கி.()

உறையு ளில்லிடம் பொருட்டுணை யுயர்மகப் பெறுமவர்க் குவந்தீத, னிறைய வேபடிப் பவர்க்குநா நற்பொரு ணிகழ்த்துவிப் பவர்க்காத்தல், குறைவ றுஞ்சிவ நேசர்வாழ் திருமடங் குலவுசத் திரமுனனூ, லறையும் வேற்றறம் புதுக்குதல் சிறையுண வனைவர்க்குந் தின்பண்டம். (உஉ)

சமைய மாறுமே வரைந்திடா துதவுமூண் சாற்றிய பேரைய
மமைவு றுதிறு மிறுதிசே ருயிரினை மீட்டலா டியாக்காத்தல்
சுமையு றும்மலர்க் காக்குள நீர்ப்பந்தர் தூய்மணங் கமழெண்ணெய்
கமைத ரும்விலங் குணவநா தப்பிணங் கதிதெரிந் திடேற்றல்.(உ௩)

மருத்து வச்செயல் கணிகையர் போகநன் மணங்கொளுந் தமதான
மருத்தி கூர்தர வானிலந் திருமுறை கண்டிகை யணிநீறு
திருத்து பூசனை வத்திர தானமே செப்பிய கடன்றீர்த்தல்
பொருத்த முற்றிடு குருவுப தேசமெண் ணன்கையும் புரிகென்றாள்.

அன்ன மேமுத லிடுதரு சட்டுவ மீந்தன ளதுவன்றி
மன்னு முத்தமத் தலைவன்முன் றருமிரு நாழிநெல் மகிழ்ந்தீந்தாள்
பின்னு மற்றுளவறமெலாஞ்செய்கெனப்புகழ்ந்துபே ரருள்கூர்ந்தாள்
பன்ன ரும்புகழ் விசயையே முதலினர் பணித்தவா றவைசெய்வார்.()

அம்பி கைக்குமுன் னிருந்தறம் வளர்த்தரும் பவமொழித் தருள்பெற்றான்,செம்பொன் மாமழை நவமணி மலர்மழை பொழிந்தன செறிவானம், பம்பு துந்துபி வாத்திய முழக்கினர் சிவகணத் தவர்பல்லோ, ரும்பர் வானமே முதலமு வுலகுமார்ப் பெழுந்தன வொன்றாகி.(உ௬)

வால கில்லியர் முதலிய விருடியர் மகிழ்ந்துபூ ரணகும்பஞ்
சால்பி னேந்தினர் வேதமந் திரங்களாற் றனித்தனி துதிசெய்தா
ரோல வார்குழ லம்மையைக் கண்டுகண் டிறைஞ்சினர் கரங்கூப்பி
ஞால முய்யவெண் ணன்கறம் வளர்ப்பது நாங்கள்செய் தவமென்றார்.

மற்று மாதவச் சுமந்துவே முதற்பதி னாயிர வரத்தோருந்
துற்றி யம்பிகை யுடன்வருங் கோதமன் முதலிய தூர்யோரா
யுற்றெ திர்ந்தறு வாயிர முனிவரு முவந்தள வளாய்ப்போற்றிக்
கற்றை யங்குழ லுமையைநல் லறம்புரி கவுரியைப் புகழ்கின்றார். ()

ஆடி னார்சில ரார்த்தெழுந் தார்சில ரருமறை யொடுகீதம்
பாடி னார்சிலர் பணிந்தெழுந் தார்சிலர் பங்கயப் பதஞ்சென்னி
சூடி னார்சில ரறங்களெண் ணான்கொடு மற்றுந்தோத் திரமாக்கித்
தேடி னார்பொருள் கண்டெனக் கண்டுகண் களித்தனர் துதிசெய்தார்.

இல்ல மேமுத லியம்புமெண் ணான்கற மியற்றுவித் தருள்வாளை
யொல்லையாகங்கள்சுருதிவேதியர்கள்செய்துவந்திடப்புரிவாளைத்,தொ
ல்லைநான்மறையாகமபுராணந்தோத்திரஞ்செய்வோர்ப்புரப்பாளை
முல்லை வாணகை யங்கயற் கண்ணுமை முதல்வியைத் தொழுவாமே.

ஞான ரூபியா யருட்பரை யாகியே ஞானசத் தியுமாகி
யேனை யிச்சுவ வடிவமா யவற்றினை யியல்புறப் புரந்தாளை
யான தொன்மையிற் சிருட்டிகா ரணமதா யந்தர்ப்பூ தமுமாகி
வான மேமுத லுலகங்காத் தருளுமை மாதினைத் தொழுவாமே. ()

பத்தி யாய்ப்பெருங் கருணையங் கடலுமாய்ப் பத்தியைத் தருவாளை
நித்தி யம்பெறு விச்சுவ முதல்வியாய் நிகழ்கயி லையின்வாழ்வாய்ச்
சுத்த மாயைமுன் னனமா யையைத்தரித் தவற்றினுட் டோயாளை
முத்தி மாநக ரிமையமீன் றளித்தருண் முதல்வியைத் தொழுவாமே.()

நிட்க ளத்தொடு சகளமா யடியவர் நினைந்தவா றருள்வாளைக்
கட்பு லப்படக் காணொணாப் பூரண கலையொடு நிறைவாளை
யுட்பு லப்படத் திரிவித கரணமொத் தருச்சிப்போ ருளத்தாளைத்
இடப மார்பிறை சூடிய வரனிடத் தையலைத் தொழுவாமே. (௬௬)

கந்த னுக்கொரு தந்தனுக் கருடருங் கருணைத்தா யானாளை
வந்த னைக்குவந் தற்முத னன்கையும் வழுத்தினர்க் கருள்வாளை
முந்து லோகவா தாரமா முதல்வியை முகுந்தனுக் கிளையாளைச்
சுந்த ரேசன்ற னிடத்திலங் கயற்கண்மின் றோகையைத்தொழுவாமே.

என்று தோத்திரஞ் செய்தலு மிறைவிகேட் டகமகிழ்ந் தனமின்னே
மன்ற நல்வரங் கேண்மின்க ளென்னவும் மாதவ ரிவைகேட்பார்
நன்றி கூர்தர யாங்களித் தலத்தினி னனிவசித் திடவேண்டுங்
கொன்றை வேணிய ரொடுநினை யனுதினங்கும்பிடும்பதம்வேண்டும்.

காசி மேருமா நந்தர மேமகூ டம்பெருங் கயிலாயம்
பேசு மத்தலங் களினுமிங் கதிகமாய்ப் பின்னுக னுமேவி
மாசி னல்வரங் கொடுக்கவும் வேண்டுமென் றியம்பமா துமைகேளா
வீசு தண்டமிழ் மதுரையத் தலங்களின் மேம்படு தலமென்றாள்.(ருசு)

ஆல வாய்பெருங் கயிலையக் காசிசாஞ் சிக்குமுற் பதியாகு
ஞால மேழ்புகழ் சுந்தர னேகயி லாயன்விச் சுவநாதன்
பால லோசனத் தேகம்ப னங்கயற் கணிபனை விசாலாட்சி
கோல மேவுகா மாட்சியாஞ் சமட்டிவித் தியாககி ரிதுகூறில். (ருஎ)

இத்த லத்தொடெம் பெருமையை யாமலாதெவ ரறிந்துரைசெய்வார்
புத்தி கூர்ந்துநீர் கேட்டநல் வரமெலாந் தந்தனம் புகழ்ந்தன்னை
பத்தி கூர்தரு சைவருக் குரைமின்பா டண்டிகட் குரையாதீர்
முத்தி மாதவி ரென்றருள் செய்தனள் பின்னரு மொழிகின்றாள்.(ருஅ)

மூனு மாசையி னித்துதி கேட்பவர் படிப்பவர் முனிவீர்காள்
கேளு நன்குறத் துதிப்பவர் நம்முயர் கிளர்பதம் பெறுகென்றே
நாளும் போற்றிட வரமளித் தருளியங் கங்கையங் கயற்கண்ணு
ளாருகூ ஙியகி யுருவிலொன் றுயின ளின்னுநல் லறஞ்செய்வாள். ()

மாத வத்திரொன் றகத்திய னுரைசெயக் கேட்டமா தவர்சொல்வார்
நீத வத்திரு வுயர்ந்தனை நின்னருள் பெறுதலால் வினைநீத்தேந்
தீத கற்றுமம் பிகையறம் புரிந்தது செப்பினை யெமக்கின்னும்
போத முற்றிய மாலருந் தவஞ்செய்து பெற்றமை புகலென்றார். ()

ஏழாவது தேவியறம்வளர்த்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருஎஎ.

---

எட்டாவது

## விட்டுணுவரம்பெற்றவத்தியாயம்.

---

பண்டொரு கற்பாந் தத்தி லொடுங்கிய முறையே பண்பார்
விண்டுவே முதலோர் தோன்ற வேதங்கள் சனகர் யோகர்
தண்டலி றவத்தோர் மிக்க பதஞ்சலி முனிதாழ்ந் தேத்த
வண்டர்நா யகனின் றாடு மானந்த நிருத்தந் தன்னில். (க)

வாணனந் திமைப்போல் விண்டு மத்தள முழக்கு கின்றான்
சேணுயர் காசி யெய்தித் தவஞ்செய்தா திக்கம்பெற் றற்போற்
றுணுவாந் துவாத சாந்தத் தலத்திலெத் தனைகா லங்கள்
பூணுமெய்த் தவத்தி னெந்தப் புனிதமா தவத்தைச் செய்தான். (உ)

சொக்கனம் முராரி முன்னந் தோன்றியெவ் வரங்க டந்தான்
மிக்கவச் சரிதை கேட்கும் விருப்பினோம் விரித்துச் சொல்கென்
றக்கண முனிவர் கூற வகமிக மகிழ்ந்து கேட்கும்
பக்குவர் நீவி ரென்று வகத்தியன் பகர்வ தானான். (௩)

சிவனடி யார்க ளடம்முட் சிறந்துளோன் றிருமால் செப்பு
மவனொடு சிவனும் பேத மின்றரி யலர்க்கண் சாத்தப்
பவந்தவிர்த் திடுதம் பாதம் பரித்தன னரையிற் பாங்கர்
நவமுறு நார சிங்கச் சருமத்தைத் தரித்தா னதன். (௪)

மார்பினி லாமை யோடு புனைந்தனன் மலர்ப்பூங் கையிற்
சீர்பெறு மவன்கங் காள மேந்தினன் றிறற்கு லத்திற்
சூர்பெறு முடல முற்றுந் தூக்கினன் றுணர்ப்பூங் கொன்றைத்
தார்முடி தனில்விண் டுக்க டலைமாலை யணந்தம் பூண்டான். (௫)

அன்றியு மிடப்பா கத்தி லவதரித் திடுத லானும்
வென்றிசேர் சத்தி தானே விண்டுவா யிருத்த லானு
மொன்றிய சத்தி யீச னிடத்திலெப் போதுண் டானு
மன்றவப் போது தானும் வந்துதித் திடுத லானும். (௬)

ஈசனு ரிச்சை தேவி யிசைந்தனு சரித்தாற் போலு
நேசமார் விண்டுத் தானு மனுசரித் திடுவ னீங்கா
வாசையாற் புருட ரூபஞ் சத்திரு பமுந்தா னவன்
மறுவிலவ் வீச னிச்சைச் சுந்தரமாக வைகும். (௭)

என்கையாற் பேத மில்லை யியம்புமால் சிவனை நோக்கி
நன்குறப் பூசை யாற்றி நற்றவ நெடுநாட் செய்தான்
பொன்கமழ் மதுரை நண்ணும் புரிசடைப் புனிதன் காணா
மின்கம ழிடையா ளோடும் வெளியின்மால் விடைமேல் வந்தான். (௮)

மான்மழு வபயந் தூய வரதமு மலர்க்கை தோன்றக்
கூன்பிறை வேணி தோன்றக் கோதையு மொருபாற் றோன்ற
வான்மிசை வந்து தோன்று மழகிய சொக்கைக் கண்டான்
பான்மைமா தவனு மன்பிற் பன்முறை பணிந்து வீழ்ந்தான். (௯)

போற்றினான் பரவி நின்றான் புளகிதத் துடல்கம் பித்தா
னூற்றுறு கண்ணீர் வார வானந்த வெள்ளத் துற்றான்
சாற்றுவ தினியென் யான்செய் தவோபலங் கிடைத்த தென்றான்
மாற்றினும் பிறவி யென்றென் றுடினான் மகிழ்ச்சி கொண்டான். ()

அக்கணத் தமல னோக்கி யமுதவாக் கருளிச் செய்வான்
சக்கர பாணி நீயுந் தவத்தினு விளைத்தாய் போது
முக்கிர மாகச் செய்யுந் தவங்கண்டுண் மகிழ்ச்சி யுற்றே
மிக்கமா வரங்க ளீவ மென்றலும் விண்டு சொல்வான். (கக)

உன்னையே காணப் பெற்ற பேற்றினு முறுபே றுண்டோ
வென்னையா ளுடையா யன்ன தாயினு மியம்பு கேன்யான்
முன்னநான் றேடிக் காணு முழுமல ரிணைப்பொற் றாளிற்
பன்னரு மன்பு பூணும் பத்தியெற் குதவ வேண்டும். (கஉ)

அரியுடன் பிறந்தா ளென்றே யமலைபேர் விளங்க வேண்டும்
பரிவினீ யவண்மேல் வைத்த பரிவென்மேல் வைக்க வேண்டும்
புரிமணத் துமையா ளுக்கு வரிசையான் புரிய வேண்டும்
பிரிவிலா நீயு நானும் பிரிவிலா திருத்தல் வேண்டும். (கங)

அமலமா மேனி தன்னிற் பாதியெற் களிக்க வேண்டும்
விமலநிற் றுதிப்போ ரென்னை விருப்பொடுந் துதிக்க வேண்டுங்
கமலமென் கண்ணாற் கண்டு கதம்பகா னத்தி ருந்தே
நிமலலிங் கமதா நின்னை நித்தியம் பணிய வேண்டும். (கச)

சுயம்புலிங் கங்க ளெங்குண் டங்கெலாந் தொழுது சூழ்ந்து
வயம்பெற நின்னைப் போற்றித் தெரிசித்து வசிக்க வேண்டு
மியம்பிய பதிட்டை பூசை யெனக்குமுண் டாக வேண்டும்
பயம்படு நித்ய நைமித் தியமும்பா லிக்க வேண்டும். (கரு)

கிரீசநீ யுறையுங் கர்ப்பக் கிருகத்திற் சூழத் தென்பால்
வரிசையைங் கரத்தன் றெக்க ணாமூர்த்தி வடபால் வேதன்
றுரிசறு துர்க்கை வைகித் தொழுவர்மேல் பாலின் வைகிப்
பரசிநின் னிருதாள் போற்றும் பதமெனக் குதவ வேண்டும். (கசு)

சிவலிங்க பூசை செய்வோர் சிறந்தநின் வாம பாகங்
கவலின்றி யென்னை யன்பாற் கருதியர்ச் சிக்க வேண்டு
நவலிங்கப் பதிட்டை செய்து நானருச் சித்த லிங்கந்
தவலின்றிச் சுயம்பு வேபோற் றழைக்கநீ யுறைதல் வேண்டும். (கஎ)

இவற்றினு மேல தான வரமெனக் கின்னு மொன்று
நவிற்றும்வா னனைப்போற் றூய நந்தியைப் போலி யானும்
புவித்தலம் புகழ்நீ மன்றிற் புரிநட னத்துக் கேற்பப்
பவித்தமத் தளமு ழக்கி யெந்நாளும் பரவ வேண்டும். (௧௮)

எத்தனை பிழைசெய் தாலு மிதுபிழை யென்றெண் ணாதே
யத்தவென் மயக்க நீக்கி யாண்டருள் புரிய வேண்டு
முத்தனே யென்று விண்டு மொழியுமிவ் வரநல் கென்னப்
பத்தர்கள் பத்தன் றந்தோ மென்றனன் பகர்வ தானுன். (௧௯)

மாகயி லாய மிந்த மதுரையம் மன்றிம் மன்ற
மேகமா விருந்து நாமே யியல்பெற நிருத்தஞ் செய்வோ
மோகநாட் டியத்திற் கேற்ப மத்தள முழக்கிக் கொண்டே
நாகமும் புலியும் போனீ நடனங்கண் டுறைதி யென்றும். (௨௦)

இன்னுமொன் றிசைக்கே நாமே யெங்கணு நிருத்தஞ் செய்வோ
நின்னொரு கலையை மற்ற நிருத்தமா தலங்க டன்னிற்
பன்னரு முழவ மார்த்துப் பணிந்தவ ணிருப்ப தாக்கிப்
பொன்னொடு மிருந்து வாழ்தி பூரண கலையொ டிங்ஙன். (௨௧)

நம்முரு விலிங்கத் திற்கு நிருதியி னயர்ந்து நாமே
யிம்மையே தருவா * னென்றே யருச்சிக்கு மிறைக்கு மேல்பாற்
றம்மையே தமக்கு நல்குந் தலத்தினி லழகு வாய்ப்பச்
செம்மையோ டுறைதி கூட லழகனாந் திருப்பேர் பெற்றே. (௨௨)

என்றருள் புரிந்து சொக்க னிலிங்கத்தி னுறைந்தான் போற்றி
மன்றவவ் வரங்கள் பெற்றே வைகினன் கமலக் கண்ண
னென்.றுமிக் கதைப டிப்போர் கேட்பவ ருயர்மா னத்திற்
சென்றுவான் கயிலை மேவிச் சாயுச்சிய மடைவர் திண்ணம். (௨௩)

ஈதுமால் சரிதை யென்றே யியம்பினன் மலயக் கோமான்
றீதகிர் முனிவர் கேட்டுச் சிந்தையுண் மகிழ்ச்சி கொண்டா
ராதிமா தவனே கண்ணன் சரிதையை யறைந்தாய் கஞ்சப்
போதினன் சரிதை யிங்குப் புகலென்றார் பின்னுஞ் சொல்வார். (௨௪)

எட்டாவது விட்டுணுவரம்பெற்றவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௦௧.

---

* இம்மையே நன்மைதருவானென்பது இம்மையேதருவான் என, இடைக்குறைந்து நின்றது.

ஒன்பதாவது

## பிரமன்பூசித்தவத்தியாயம்.

---

வாமபா கத்திலரி வலப்பாலில் விதியுதித்தார் மைந்த ரன்றே
காமனு கங்கருக்குங் கண்ணன்மணி வண்ணனுக்கே கருணை கூர்ந்து
தாமமா ருயர்பூசை கோயிலவர்க் குண்டாகத் தம்போ லாக்கிப்
பூமனூர்க் கிப்புவியிற் பூசையுங்கோ யிலுமின்றிப் போகச்செய்தான்.

அக்கார ணத்தையெமக் கியம்புதியென் றருந்தவத்து முனிவர் கூற, முக்காலங் களுமுணரு மகத்தியன்கேட் டுரைசெய்வான் முனிவர் கேண்மின், மிக்காமக் கதைபுகல்வேம் விமலனுமவ் வவர்செய்யும் வினைக்கி டாகப், புக்காவிக் குள்ளிருந்து கன்மானு போகமெலாம் புசிப்பிப் பானுல். (உ)

ஒருவரிடத் தேயன்பு மற்றொருவ ரிடத்திலையென் றுரைக்கவேண்டா
மிருவரிடத் தினுஞ்சமமா மீசனருள் வாரபக்க மில்லை யென்றும்
வருவதற்குக் காரணமே தென்பீரோ வுலகரடை வளர்க்கு மாற்ற
லிருவருக்கும் பாவியரை யிறைத்தினரை விருப்புறுநல்லருளேசெய்யும்.

நான்முகன்பொய் யுரைத்தலினு னிலத்தி னிலையிழந்து நவையு முற்றான், மான்முகங்கண் டோருரைப்பர் பொய்யெனமா னுடர்சுரர்க்கிந் நினைவு வாய்ப்பப், பான்முகங்கொண் டிருந்திடுதம் மதலையுந் தண்டித்திப் பரிசு செய்தா, னான்முகங்கண் டறிதிரென வ வனுரைப்ப முனிவரரு ளுவல்வ தானுர். (ச)

அத்திருநான் முகன்சொலும்பொய் யேதுரைத்தி யென்னவகத்தியனுஞ் சொல்வான், சத்தியமே பரமமாந்த ருமமென்று மசத்தியமே பாவ மென்றும், பத்திதரு சத்தியத்தோர் புண்ணியரா மசத்தியர்பா வியர்க ளென்று, நித்தியமா யிசிவன்கற் பனைசெய்தா னவ்வாம்பு நீக்கற் பாற்றோ. (ரு)

சத்தியமே பலவேள்வி தலந்தீர்த்தம் பரமசிவன் றங்குந் தானஞ்
சத்தியமே மேலான தவந்தருமஞ் சோடசமா தான மாகுஞ்
சத்தியமே சிவபூசை சரியைகிரி யாயோகந் தருமெய்ஞ் ஞானஞ்
சத்தியமே புகலுமிக பரத்தினுக்குக் காரணஞ்சத் தியமீ துண்மை.(சு)

பொய்யுரைப்போ ரொத்தவங்கள் புரியினுமத் தவோபலத்தைப் பொருந்த மாட்டார், பொய்யுரைப்போ ரொத்தருமஞ் செய்யினுமத்

தருமபயன் புசிக்க மாட்டார், பொய்யுரைப்போர்க் கண்டளவிற் சி
வன்விலகி நெடுந்தூரம் போவன் வேதன், பொய்யுரைப்போர்க் கூல
கினிற்போ சனங்கிட்டா தெனும்பழஞ்சொற் புதுக்கி னானல். (௭)

ஆதிகா லத்தினிக ழுவன்சரிதை விரித்துரைக்கே மடைவிற் கே
ண்மின், மாதுபா கனையிகந்தவ் வாரணனு நாரணனு மயங்கிக் கூ
றுஞ், சோதிசேர் பரம்பொருளியா னியான்பெரியன் பெரியனென,
விகலித் தொன்மை, நீதியாய்த் தளந்தறிந்து மறியார்போற் பொரு
டேறு நினைவு தீர்ந்தார். (௮)

எம்மினுநித் தெமையிகழ்ந்தா யாவையுநல் குவம்பெரியே மெ
ன்றான் மாயன், வெம்மையொடு நான்முகனு மவன்போலப் புகன்ற
னன்பின் வெகுளி கூர்ந்து, நம்மினுமிக் கோரிலையென் றகந்தையி
னால் வருங்குறியை நாடா ராகித், தம்மின்மிகு போர்புரிந்தா ரிரு
வோரு நெடுங்காலந் தணவா ராகி. (௯)

தொந்தப்போர் புரிந்திடுங்கா லிருவோரும் பாசுபதந் தொட்டா
ர் விட்டார், வந்தப்போ ரத்திரங்க ளொன்றொன்று தாக்கவழ
ல் வானந் தோங்கி, யிந்தப்பூ வுலகுமுத லியம்பியசத் தியவுலக மீறா
யெங்கு, முந்தப்போந் தெரித்திடுங்கான் மானிடர்விண் ணவரெவரு
முறையிட் டாரால். (௧௦)

இறைவனது கண்டிரங்கி யாமுதவா திருக்கிலெலா மிறக்கு மெ
ன்றே, நிறையுமழற் றம்பமென விலிங்கமதா யளப்பரிதாய் நீண்டு
நின்றா, னுறையுமழற் பாசுபத வத்திரங்க ளதிலொடுங்கிற் றும்ப ரு
ய்ந்தார், மறையவனுந் திருமாலு மச்சுடர்கண் டார்மயங்கி மற்போர்
விட்டார். (௧௧)

கட்புலனி லளக்கவொண்ணாச் சோதியைக்கண் டார்கண்டு கல
முற்று, ருட்புலன்க ளொடுங்கியித னடிமுடிகாண் பவர்பெருமை
க் குரிய ரென்றார், விட்புலனிற் சென்றுமுடி யறிவனென விதிசபதம்
விளம்பி னான்மால், கொட்புலனி லடிகாண்ப னெனவரியு நெடுஞ்ச
பதங் கூறி னானல். (௧௨)

யோசனைநீண் டகன்றுயர்ந்த வெகினவடி வாய்மலரோ னும்ப
ரோங்கிப், பாசனையும் வகையறியா னரைக்கணத்தா யிரங்காதம் ப
றந்து போனான், மாசனையு மிலர்க்கண்ண னிரண்டியோ சனையுயர்
ந்த வராக மாகித், தேசனையும் படிதுளைத்துக் கணத்தினுக்கா யிரங்
காதந் துருவிச் சென்றான். (௧௩)

இம்முறையா லிருவருந்தே வாண்டினிலா யிரம்பறந்து மிடந்து ந் தேடித், தம்முருவந் தேய்வதன்றிச் சிவனுருவி னுதியந்தந் தாமோ காண்பா, ரம்மலரோ திமன்சிறைகான் மூக்கலகோ டுட்டுறெய்ந்தங் கறமூர்ச் சித்தான், கம்முகங்கால் கோடுடல முழுவதுந்தேய்ந் தறக் குறுகிக் கவன்றான் கண்ணன். (கச)

கவலுறுமான் மூர்ச்சைதெளிந் தறமெலிவான் கருதியுளத் தெண்ணி நோக்கி, யவலுறக்கூ டாபுவியின் மீதும்வரக் கூடாதென் னறிவென் னுகுந், தவலறுநான் பொருளென்றுஞ் சிவன்பொருளன் றென்றுமிந்தத் தவறுற் றேனியா, னுவலுறுமா றென்கெட்டே னிதுவருமோ விப்பாவ நுனிக்கற் பாற்றே. (கரு)

எனமனத்தி னெண்ணியர னடியையித யத்திருத்தி யெந்தா யந்தோ, மனமயக்கா லிதுசெய்தேன் பொறுத்தியெனத் தியானித்தான் வருத்த நீங்கிக், கனமிகுத்த வலிபெலமுற் றனன்மீண்டும் பூவுலகிற் கடிதி னெய்தி, யனமயக்கிற் காணுதென் றறிந்தோனுஞ் சுடரிலிங் கத் தருகே வந்தான். (கசு)

மோட்டுமா வரியுருவாய்த் தவறிழைத்தே னத்தவறு முழுது நீங்க, விட்டுமா தவப்பொருணீ யருளுகெனச் சோதியிலிங் கத்துட் டோன்றித், தோட்டுகாண் மலரிதழித் தொடையோனுந் தருப்பணத்துட் பொருள்போற் றன்னைக், காட்டினன் கண்டுபணிந் தெழுந்து நின்று துதிசெய்தான் கவலை தீர்ந்தான். (கஎ)

பயத்தானம் மால்பின்னு மறைந்துநின்றான் பங்கயத்தோன் றன்மை கூறி, லயர்த்தாவி தேய்ந்தொடுங்கி மூர்ச்சனையா லங்குமிங்கு மணுக மாட்டா, னுயத்தானும் வகையறியா னலம்வருங்கால் யோகியரவ் விடத்தி னுற்றார், வியர்த்தாவி வருந்துமவன் வரக்கண்டா ரொருமாற்றம் விளம்பு கின்றான். (க[illegible])

எங்கிருந்து வருகின்றீ ரெவ்விடத்திற் செல்குவிரென் றியம்ப வேழை, யங்கிருந்தின் னருள்கொழிக்கும் பரனருள்பெற் றியாம்போ ந்தே மென்றார் பார்ப்பா, னங்குமிங்கு மெத்தூர மெத்தனைநாட் சென்றதென்று னன்னோர் சொல்வார், கொங்கிருந்த மலர்ப்பிரம கற்பமனந் தந்தொகுத்துக் கூடா தென்றார். (ககூ)

வாசமல ரோய்நீயிங் கெய்தியதென் னென்றார்நம் வாம பாகத், தீசன்முடி காண்பனென விண்டுவிறே டிகலியிவ ணுற்றே னென்றா, ரனுசிவன்மா முடிநீயோ காண்பாய்பே ரகந்தையுற்றா யறிவொன்

றில்லாய், நீயிந்தப் புந்தியைவிட் டினித்திரும்பென் றவர்போனார் திகைத்து நின்றான். (௨0)

பஞ்சமலத் தான்மயங்கப் பங்கயனு முடிதேடிப் பார்த்தே யில்லேக், கஞ்சமலர்க் கண்ணனடி காணும னம்போலக் கவல்கின் றானே, தஞ்சமுறக் கண்டனனே சபதமென்று மென்றுபா தயிக்குங் காலே, வஞ்சமலர்க் கைதையொன்று வரக்கண்டான் கையேந்தி வாங்கிச் சொல்வான். (௨௧)

மணங்கமழுங் கேதகையேயனைத் தனைகாலஞ் சென்றதிவண் வரநீ யென்ன, வணங்கொருபால் வீற்றிருக்குஞ் சிவன்முடியின் றிழிந்துமிவ ணடைந்தேன் காலமிணங்கவுரைத் திடமுடியா தெண்ணிறந்த காலமென்ற தியம்ப வேதனுணங்குமறி விழந்தனனக் கைதையைப்பார்த் தனன்பின்னு நுவல்வ தானான். (௨௨)

வேறு.

கைதையே யெனக்குப கார நீயொன்று
செய்தையே யுன்னையே துதித்தல் செய்வலென்
றெய்தவே யியம்பயா தியம்பென் றோதலு
மொய்தையே யதுவர நுனித்துக் கூறுவான். (௨௩)

படிமிசை விடுசுடர்ப் பரனை யெள்ளியே
யடிமுடி காண்பமென் றறுதி யிட்டனங்
கடிமல ரடியரி காணப் போயினன்
முடியிது காணயா னிங்கு முற்றினேன். (௨௪)

கண்டில னுனைக்கண்டு கவலை தீர்ந்தனன்
விண்டுமுன் னேயெனக் காக மெய்ம்மையே
யண்டர்நா யகன்றிரு முடிகண் டானென
வண்டெனப் பொய்ம்மையொன் றுரைக்க வேண்டுநீ. (௨௫)

மறுத்துரை யேலென வழங்கக் கேதகை
சிறுத்தவர் தொழிலிது செய்யொ ணாதென
வெறுத்தன கூறியும் வேதன் வாதையா
லுறுத்துபொய்ச் சான்றுரைக் குடம்பட் டுள்ளதால். (௨௬)

நின்னிக ரில்லென நிகழ்த்தி யேயது
தன்னையுங் கொடுவிதி யிழிந்து தாரணி
முன்னிய சுடரொளி யிலிங்க மூர்த்திமுன்
மன்னியே துதிசெயு மாலைக் கண்டனன். (௨௭)

நாரணா செய்தசால லெனமுன் னாரணன்
காரணா திபனடி கண்டி லேனியான்
பூரணா திபன்முடி காணப் போகிய
வாரணா னின்செய லறைகென் றோதலும். (௨௮)

முடியது கண்டனன் முடியிற் சாத்திய
சடிமலர்க் கைதையீ தென்று காட்டினான்
படியிடந் தவனவன் பான்மை நோக்கியே
பிடிபடா தெவர்க்குநின் பேச்சுப் பொய்யென்றான். (௨௯)

யாதினாற் பொய்யென வியம்பு வாயலர்த்
தாதுசேர் கைதையே சான்றென் றானயன்
மாதவன் றானுமம் மலரைக் கேட்டலுந்
தீதிலா யுள்ளதென் றியைந்து செப்பிற்றால். (௩0)

பொய்ம்மையே யிருவரும் புகன்ற வாய்மொழி
மெய்ம்மையன் றென்றரி மீண்டுங் கூறலு
மெம்மையோ விதுபுகன் றீதி யென்றெதிர்
கொம்மென நான்முகன் கோபங் கொண்டனன். (௩௧)

மருத்தயில் பாப்பணை மாயன் றன்னொடவ்
வுருத்திர னென்னிடத் துதித்து ளோனெனக்
கருத்தினி லிகழ்ந்தன னெந்தை காட்டினான்
பொருத்துற வறிந்தவ னகந்தை போக்குவான். (௩௨)

சுடரொளி யிலிங்கத்தி னின்று தோன்றியே
யடல்விடைப் பாகனின் றடர்ந்து சொல்லுவான்
மடல்கெழு மலரினோய் மதித்தி டாதிவண்
டிட்மொடு பொய்யுரை செப்பற் பாலையோ. (௩௩)

பொய்ம்மையுஞ் சூதுங்கட் கொலையும் புன்மையுஞ்
செம்மையில் குருநிந்தை தேவ நிந்தையும்
கைம்மிகு மகந்தையுங் களிப்புங் காமமு
மிம்மையு மறுமையுங் கெடுக்கு மெந்திரம். (௩௪)

கணத்தினி லனந்தநான் முகரைக் காட்டியக்
கணத்தினி லொடுக்குது நம்முட் காணவே
பணத்தினிற் றுயில்கொளும் பச்சை மாலொடு
மெணத்தகா நினையொரு பொருளென் றெண்ணலேம். (௩௫)

ஆயினும் பொய்யுரை பகர்ந்திட் டாயதான்
மாயிரும் புவியினுன் றனக்கு வண்மைசேர்
கோயிலும் பூசையும் போக கோமுறை
சாயுக வெனக்கடுஞ் சாபஞ் சாற்றினான். (௩௬)

பயிரவன் வந்துபொய் பகரைந் தாந்தலை
செயிருறக் கிள்ளியக் கணத்திற் சென்றனன்
வயிரங்கொண் டொருதலை யிழந்த மான்மக
னுயிருற வொடுங்கியுண் ணடுங்கி யோய்ந்தனன். (௩௭)

தனியற மறந்துபொய்ச் சான்று கூறிய
பனிமலர்க் கைதையை நோக்கிப் பண்ணவ
னினிதென வணிகல மெமக்கு மாகலை
புனிதநீ யலையெனப் புகன்று நீக்கினான். (௩௮)

சிவனொரோர் தொன்மையுஞ் செப்பொ ணாதவ
னவன்செயும் வினையனு பவித்துத் தீர்வுறுந்
தவநெறி முனிவரர் கேண்மின் றூவறு
புவனமுண் டவனுறு பொய்சொல் லாமையால். (௩௯)

பூசையுங் கோயிலும் புராரி மேல்வைத்த
வாசையு முடையனு யவற்குச் சத்தியாய்
மாசறு சாத்தனை யீன்று மற்றுள
பேசருங் கடவுளர்க் கதிகம் பெற்றனன். (௪0)

அகந்தையுற் றுளனவ னுயி னும்பல
ரிகந்திடும் பொய்யுரை யியம்பி டானென
நிகழ்ந்திடு மயக்கத்தை நீக்கி நின்மலன்
முகந்துதன் கருணையே முற்று நல்கினான். (௪௧)

அரிசெய லீதந்த வயன்பின் செய்ததைத்
தெரிவுறக் கேளுமி னென்று செப்புவான்
புரிசடை யமலனை யிகந்து பொய்யுரை
துரிசறப் புகன்றனன் சொல்வ தேதெனு. (௪௨)

அன்றியும் பூசையு மால யங்களு
மின்றியே புவியினி லிகழ்ச்சி யுற்றுளேன்
கொன்றைவே ணியன்பொரு ளென்று கொண்டிலேன்
கன்றிய சிவத்துரோ கத்த னுயினேன். (௪௩)

இக்குறை தீர்ப்பதெம் மீச னேயலாற்
புக்கெவர் தீர்ப்பரென் றெண்ணிப் போதனு
மக்கணத் தறிவுவந் தடைவிற் போற்றியான்
புக்கன னபயநீ பொறுத்தி யென்பிழை. (௪௪)

மைந்தர்க ளொருகுறை செய்யின் மாற்றியே
தந்தையர் வெறுத்துடன் றயவுசெய்குவ
ரெந்தைநீ யிரங்குகென் றீசன் றுண்மலர்
சிந்தைசெய் தருந்தவஞ் செய்கின் றனரோ. (௪௫)

பருவமோ ராயிரப் பஃது பங்கயன்
பொருவரு மருந்தவம் புரியுங் காலையில்
வெருவலை யெனச்சிவன் வெளிநின் றோதுவான்
றெருமரு மிப்பவந் தீரு மாறுகேள். (௪௬)

எத்தவ மியற்றினுந் தீர்வு றுதிது
சத்திய மேனுநீ தனைய ஞதலாற்
புத்தியுட் கொள்ளுதி புகல்வன் சிவன்மா
முத்திநன் னகரென மொழியு மோர்தலம். (௪௭)

புவிபுகழ் தருவிராட் புருடன் மேனியி
லவயவ மாமற்றைத் தலங்க ளாலவாய்
விவிதமாந் துவாதசாந் தத்தின் மேம்படுங்
கவலுறே லத்தலங் கதம்ப கானனம். (௪௮)

பூரண கலையொடும் புகறென் கூடலிற்
காரண காரியங் கடந்து வைகுதுந்
தாரணி புகழ்ந்தகத் தலத்தின் மேவியே
யாரண நீசிவ பூசை யாற்றுவாய். (௪௯)

ஆங்கணின் பவமொழிந் திடுமங் கேகெனத்
தேங்கம ழிதழியான் செப்பக் கேட்டலும்
பாங்கொடு மவன்பதம் பரவிப் பங்கயன்
வாங்கரும் பெரும்புகழ் மதுரை யெய்தினன். (௫௦)

வேகமா நதிசிவ தீர்த்த மிக்குயர்
மாகமார் தருபொற்று மரையித் தீர்த்தத்தின்
மோகமார் வினைகெட மூழ்கிச் சொக்கெனு
மேகமா லிங்கத்தை யிறைஞ்சி யேத்தினன். (௫௧)

அங்கயற் கண்ணுமை யம்மையை யன்பொடு
பங்கயக் கண்ணனும் பணிந்து போற்றியே
வெங்கொடும் பொய்புகல் வினைய கன்றிடத்
தங்குநா ளுண்டரும் தவம்பு ரிந்தனன். (௫௨)

வேறு.

பொற்புறு பெருங்கல் யாண புரத்தரைக் குரோச மேல்பா
லற்புதச் சொக்க லிங்கத் திற்கொரு வடபா லான்ற
சொற்றமி ழறியும் வேக வதிவட கரையிற் றோன்றுந்
தற்பர லிலிங்கந் தன்னிற் பூசித்தான் றன்பே ராக்கி. (௫௩)

மூந்திய சிவதீர்த் தத்தின் மூன்றுகா லமுநீர் மூழ்கி
விந்த * மா மலரோர் காலத் தாயிர மாக மேன்மை
தந்தவூ வாயி ரத்தாற் சாற்றுமவ் விலிங்கந் தன்னிற்
சிந்தித்துப் பூசை செய்தான் சிவசகத் திரநா மத்தால். (௫௪)

அஞ்செழுத் தயுத நாவி னடைவினுச் சரித்தா னித்தம்
விஞ்சுமிப் படியால் வேதா கமவிதி விதியர்ச் சித்தே
தஞ்சென விருந்தா னாறுண் டத்தல விசேடந் தன்னாற்
செஞ்சவே யிலிங்க நின்று சிவனவற் கருள்வா னெண்ணி. (௫௫)

தோன்றினன் சேவின் மீது தோன்றிடக் கண்ட வேத
னேன்றவா தரவாற் கும்பிட் டிருகணீ ரருவி சோரத்
தான்றனி முடிக டாழச் சதமுறை வணக்கஞ் செய்தான்
வான்றுணை யெனக்கு நீயென் றன்பினால் வழுத்த லுற்றான். (௫௬)

வேறு.

தேவா திபர்தந் தேவே சரணஞ் சேகர தபுரா தனனே சரண
மூவா முதலே திருவாப் புடையாய் முதல்வா கருணா கரனே சரண
நாவா ரவழுத் தியபத் தர்கள்பா னலமிக் குதவுந் தலைவா சரணங்
காவா யெமைவந் தாள்வாய் சரணங் கமலே சசதா சிவனே சரணம்.

சத்தா நிரும லசுத்தா சரணந் தகுநான் மறையின் பொருளே சரணம்
வித்தா யொருமு தலானாய் சரணம் வியனா கும்வியா பகனே சரணங்
கொத்தார் புரமெ ரிசெய்தாய் சரணங்குழகாவன்னவினோதாசரணம்
பித்தா மலமொ ழியத்தா சரணம் பிரமே சசதா சிவனே சரணம். ()

* அரவிந்தம் என்பது விந்தமெனத் தலைக்குறைந்து நின்றது.

ஞானத் துருவே சரணஞ் சிவமெய்ஞ் ஞானந் தருவாய் சரணஞ்சரண
மோனத் தெளிவா யுயிருக் குயிராய் முழுதுந் தெரிவாய் சரணஞ் சர
கூனற் பிறையா யரவமணிந்தாய்குரவங்கமழ்குழல்பாகாசரண[ணம்
மீனத் துவசற் கருள்வாய் சரணம் வேதே சசதா சிவனே சரணம். ()

எந்தாய் தந்தையு மானாய் சரண மெத்தே வினையு மளித்தாய் சரண
மைந்தா ரிடபத் துவசா சரணர் வரநல் கிடுமுத் தமனே சரண
மூந்தா ருருவ மனந்தா சரண முறைசே ரும்விகா ரமிலாய் சரணஞ்
சிந்தா மணியே சரணங் கமலத் தேவே சசதா சிவனே சரணம். ()

நாதா வுலக வதிதா சரண நலமார் விழிக ளனேகா வுலகுக்
காதா ரமுநீ யானாய் நதிகட் கதிவே கவதிக் கரையாய் சரணங் [ம்
தாதார்மலர்கொடுனைப்பூசித்திடுதமியன்பிழைகள்பொறுப்பாய்சரண
பூதா திபகு ருநாதா சரணம் போதே சசதா சிவனே சரணம். (கூக)

வேறு.

என்றுதுதித் தேகமலன் பின்னருநல் லருள்கொழிக்கு மிறைவ நின்னைத், தொன்றுதரு நான்மறைகண் டறியாதென் றுரைனோ தொகுத்துக் காண்பேன், கன்றுவினை தீர்த்தெம்மைக் கைவிடே லெனத் தொழுது கழறி நின்றான், வென்றிமழ விடையானு மவன்முகம்பார்த் தருளியிவை விள்ம்பு வானால். (கூஉ)

கமலநீ நங்கடம்ப வனத்திலருந் தவங்கருதிப் புரித லானு
மிமலமா விளங்குபுரா தனவிலிங்கம் பூசித்த நேர்மை யானு
மமலமாந் தோத்திரத்தி னுமக மகிழ்ந்தனமிப் பதியி லான்ற
விமலபோ தெறையிலிங்கம்பூசிப்போர்க்கெப்பவமும்வீடுந்திண்ணம்.

காசியினிற் சிவலிங்கம் பதிட்டைசெயும் பலத்தினுநங் கதம்ப கானத், தேசறவே பதிட்டைசெய்யி னூறுமடங் கதிகமென்று வி மையோர் போற்றுந், தேசுபெறு சிவதீர்த்த முப்போது மூழ்கிநேச சனைச்சே வித்தே; நேசமுறு புராதனலிங் கம்பூசிப் பவர்பயனை நிகழ்த்தற் பாற்றே. (கூச)

வேகவதி மணன்மறையோ னனமாக்க லாலன்ன விநோத மொன்று
மாகமுறு பசுப்பூசித் தருள்பெறலால் வளர்திருவாப் புடையாரொன்று
நாகமருச் சித்தணியா விளங்கலா லரவமணி நம்ப ரொன்று
மாகமநூல் விதிநீயர்ச் சனைசெயலா லரதிபிர மேச மொன்றும். (கூரு)

தழைத்திடுமெய் விலிங்கத்தின் றிருநாமம் யுகநான்குந் தவமோர் கோடி, பிழைத்தபயன் றூரத்தே தெரிசித்தோர்க் கடையும்வினை யெ

வல்லா நீறுங் குழைத்திடுமெய் யன்பினரா யித்தலத்து வசித்துநித்தங் கும்பிட் டேத்திற், பிழைத்திடும்பொய்ப் பவமகன்று கதியுறுவர் கூப ம்புவின்முந் தியதாய்ப் பேசும். (சுசு)

நாரதமா முனிமுதலாந் தேவவிரு டியர்நலஞ்சேர் வசிட்டன் மு ன்னும், பேருறுமா தவத்தின்மிகு பிரமவிரு டியரிமையோர் பேணிப் போற்றுந், தாரகமா மவ்விலிங்கத் தனைகவதி சயந்தோன்றுந் தகுவா, கீசர், பூரணராந் திருஞான சம்பந்தர் சுந்தரர்போற்றுவர்நக் கிரன்.()

திருநாம முச்சரிக்கக் கிருதத்திற் றிரேதத்திற் றெரிசித் தேத்தக், கருநாமங் கெடத்துவாப ரையிற்பூசிக் கக்கலியு கத்திற் பூசித், தொ ருநாம முச்சரிக்கப் பவமகலுஞ் சொக்கலிங்க முதவும் பேறு, தருநா முண் மையைப்புகன்றே மிவ்விலிங்க நின்பெயராற் றழைக்க வெ ன்றும். (சுஅ)

கேட்டிநீ வரங்களுனக் குதவுவமென் றரனருள்க் கேட்டு வேத, ளுட்டமூன் றுடையாய்நின் னிகழ்ந்தசிவத் துரோகத்தா னலியுந் தோடம், வாட்டமுறு பொய்யுரைத்த தோடமனை நீக்கியருள் வழங் கல் வேண்டும், வேட்டுலகிற் றமியனுக்குப் பூசையுங்கோ யிலுமுன் போல் விளங்கல் வேண்டும். (சுகூ)

முத்தியே யுதவுறுநின் னிருத்தத்திற் கியைந்திடயான் முறையிற் றுள,மொத்தியே தொழவேண்டும் பிரமதா னப்பெயர்பெற் றோங்க வேண்டு, மத்தனே யருளுகென வவ்வரந்தந் தேமெனப்பின் னமல ன் கூறும், பத்தியே தருமிந்தப் பதியினில்வந் தடையுமுனின் பவநீங் கிற்றுல். (எ0)

ஆயினுமப் பவந்தீர்த்தே மருமறையோர்க் குதவுதனிற் கருளிச் செய்தே, மேயுறுநந் திருநடத்தின் றிருத்தாளப் பணியுமுனக் கீந்தே மிந்த, மாயிருஞா லம்புகழப் பிரமதா லப்பெயரும் வழங்கி னேம்வ ண், சேயெமக்கு நீயுதவுற் சிருட்டியுமுன் போற்றழைக்கச் செய்தே மென்றே. (எக)

வரமுதவி யிமலனுமம் மூலவிலிங் கத்தானுன் மலரு ளோனுந், திரமுறவவ் விமலனடத் திற்கியைத் தாளமொத்தித் தெரிசித் தேத்தி ப், பரமுறுமற் றையதலத்துந் திருத்தாளப் பணிசெய்து பரவி வாழ்ந் தா, னுரமுறவிக் கதைபடிப்போ ருரைப்போர்கேட் போர்கயிலை யுற்று வாழ்வார். (எஉ)

விதிசரிக்க யிதுவென்ன மலையமுனி விளம்பினன் விளம்பக் கேளா, வதிசயமுற் றருந்தவத்தோர் மீளவுஞ்சொல் வார்மதுரை யால வாயிற், கதிதருமெம் பரனெண்ணெண் டிருவிளையா டற்கதை கா சியின்முன் சொன்னாய், துதிபரவு மித்தலத்துங் கேட்கவிரும் பின மின்னுஞ் சொல்வா யென்றார். (எங)

என்றுமுனி வரரியம்ப வசத்தியனங் குரைசெய்வா னினிது கே ண்மின், னன்றிதரும் யுகமொன்றி ஞனன்கு நானன்கா நான்கு கத்து ம், வென்றிதர விளங்கியதிக் கதைமுழுதுஞ் சாரமா விளம்பு கின்றே ந், தொன்றுவினைப் பவமகற்றுங் கதியுதவு மெனத்தொகுத்துச் சொ ல்வ தானன். (எச)

ஒன்பதாவது பிரமன் பூசித்த வத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - சஎ௫.

---

பத்தாவது

## இலீலாசங்கிரகவத்தியாயம்.

க-வது இந்திரன்பழிதீர்த்ததிருவிளையாடல்.

புரந்தரன்முன் விருத்திரா சுரனை வீட்டும் புன்பழிநாற் கூறுக் கி நீக்கி வந்தே, யரக்கைத்தவிர் திருத்தங்கண் டிரங்கத் தேவர் மனங் கவரு மடல்வேட்ட மென்னப் போந்து, வரந்தருநற் கதம்பவனத் த ருளா லேய்தி வரதனைக்கண் டாவிப்பொற் கமலஞ் சூட்டித், திரன் றருசித் திரையில்விடாப் பழிநீங் கற்கெண் டிண்கயமா னஞ்சாத்திச் சிறப்பின் வாழ்ந்தான் *. (க)

௨ - வது வெள்ளையானைக்குச்சாபந்தீர்த்ததிருவிளையாடல்.

வாசவன்கூ றிடவயிரா பதநீ பக்கான் வந்தருளா லீசனைக்கண் டிறைஞ்சி வேந்தன், றேசுபெறு துருவாசன் கொடுத்த சேடந் திரு

* இச் செய்யுண் முதல் "பொற்புறுகண்ணுவன்,, என்னுஞ் செ ய்யுளிறுதியாகவுள்ள அறுபத்து நான்கு செய்யுள்களாற் றனித்தனி சங் கிரகமாகச் சொல்லப்படுகின்ற அறுபத்துநான்கு திருவிளையாடற் சரித் திரங்களும், அவற்றின் வைப்பு முறையும் வேப்பத்தூரார் திருவிளை யாடற் புராணத்துச் சரித்திரங்களையும், அவற்றின் வைப்பு முறையை யும் ஒத்திருக்கின்றன; ஆதலால் இச் சரித்திரங்களின் விரி அப்புராண த்தாற் செவ்விதிற் பெறப்படும்.

முடிசூ டாதிகழத் தென்னர் கோவாற், பேசுறுமா முடிபிளக்க வெ
ற்றுண் ணொன்றும் பெரிதுதுகைத் திடுமெனேவின் ணகன்று மண்
ணிற், காசுறச்செல் கென்றுமுடன் சபிப்பப் போந்தே னெனக்கழ
றிக் கடுஞ்சாபந் தீர்ந்தே கிற்றால். (௨)

## ௩-வது மும்முலைத்தடாதகையம்மையவதரித்ததிருவிளையாடல்.

தென்னன்மலை யத்துவசன் காவின் மாதர்ச் சேர்ந்துநெடுங் கா
லங்கள் போக்கி வேந்த,ரின்னகைமா தினைமணந்து மகவி லாமவிய
ற்றுதவத் தான்மூன்று முலையி ஞனோர், மின்மகவை யருளவரு ளா
லமைச்சன் விளங்கியபேர் தடாதகைநன் கணவற் கண்டான், மன்
னுமுலை மறைந்தரசா மெனப்பொன் மோலி வைத்தரசன் வானடை
ந்தான் மதுரை யாண்டாள். (௩)

## ௪-வது திருமணஞ்செய்ததிருவிளையாடல்.

மும்முலையாள் கணவனைவேட் டெழுந்தெண் டிக்கு முடிவிச
யஞ்செய்து கயிலைமேவ,வம்மினென விமையவர்போர்புரிந்தாற்றுது
வந்துரைப்ப வஞ்சலென்றீ சன்முன் கண்டாள், செம்மையிற்காண்
பளவின்மற்றைத் தனமு றைந்த செயலறிந்தே யருளொனுருந் திருக்
கண் சாத்தித்,தம்முறையான் மணந்துமுடி சூடி வையந் தனையாண்
ட சிவலிங்கார்ச் சனையுஞ் செய்தான். (௪)

## ௫-வது பதஞ்சலிக்குநடனஞ்செய்ததிருவிளையாடல்.

திருமணத்தின் வந்தோர்க டமைநீ ராடிச் சென்மினிவு ணென
மூழ்கி முனிவர் தேவர், வருமவரிற் பதஞ்சலிமா முனிவன் றில்லை
மன்றினடங் கண்டல்லாற் புசியே னென்னத், தருமகவான் சாத்திய
பொன் மான மீது தளிர்ப்பொடிகண் டறிதியெனக் காட்டி முன்னே,
யருமறைசூழ் கனகசபைத் தென்பால் வெள்ளி யம்பலத்தி னடம்புரி
ந்தான் புசித்தான் கண்டு. (௫)

## ௬-வது பூதமுண்டதிருவிளையாடல்.

தடாதகைசொல் வாளிறைவ னின்னோ டிங்குத் தாவில்பலர் வரு
வரென வமைத்த வன்னம்,விடாதசுரர் சுரர்நாகர் நரர்க ளுண்டு மிக
வளருந் தொலைந்ததிலை யென்னும் வேலை,யடாதபசி யால்வருந்தி மெ
லிந்த குண்டோ தரனுற்றே னெனவலற வீசன் காட்ட, வடாதுகயி
லைக்கிரிநேரன்னக் குன்றை வாரியயின்றதுகொடியின் மங்கை நாண.

## எ-வது வைகையாறழைத்ததிருவிளையாடல்.

எ பொருவருமா தபத்திரந்தாங் கியநான் சிற்றாண் புசித்திளைத்தே னென்றன்னங் குழிக ளுண்கின், வருதலுநாற் றிரளையாய் விழுங்கித் தெண்ணீர்த் தாகத்தான் மடுப்பொய்கை வாவி கூபப், பொருபுனலு ள் ளனகுடித்தும் புனிதா நீரென் றேவிட்ட பூதநதி யழைத்துக் காட்ட, வொருவுகிழக் ககன்றபுனன் மீண்டுஞ் செல்ல வுறிஞ்சியது மண ல்பிறங்க வாயங் கரந்து. (எ)

## அ-வது கடலழைத்ததிருவிளையாடல்.

அன்புடைய வன்னைகட லாடற் கெண்ணி யவண்மொழிகேட் டீசனைத்தன் வசத்த தாக்கு, நன்புடையா டொழுதுரைத்தம் மாற்றங் கூற நயந்தறியா ரெனவிருந்து முகம்வா டக்கண், டின்புடைநின் முக வாட்டந் துணிந்து காண்பா னெண்ணியிருந் தேனெனவேழ் கடலு ங் கூவத், தென்புடவி கடவாதவ் வடைவின் வந்து சிவதீர்த்தந் தடத் துறவேழ் கடலென் றூர்கள்· (அ)

## கூ-வது மலயத்துவசபாண்டியனையழைத்ததிருவிளையாடல்.

வாரிதியொன் றுவந்தனையேழ் கடலு மிங்கு வந்ததுநம் மிறைய ருளா லாடு கென்னப், பேருததி மாமடவா ராடிற் கொண்கன் பிறங் குசுத ருன்கன்றே டாடி னல்லாற், சாருறவா டாரென்பர் வரரென் றியாய்முன் சாற்றுதல்சிற் றப்பதியை யழைத்துக் காட்டிச், சீருதவு கணவனொடா டிப்போற் றுமுன் சிவலோகங் கொடுக்கவவர் சேர்ந் து வாழ்ந்தார். (கூ)

## கo-வது உக்கிரப்பெருவழுதியாரவதரித்ததிருவிளையாடல்.

பொன்மலைய மயிலரசு புரிந்து காக்கும் புவிமுழுதோர் புரமெ னவே புரக்கும் வேந்தன், மன்மதிமா மரபோங்க வருங்கோ மானுன் மாறறுசுந் தரமாற னுதி மாறன், மென்முளரிக் கண்ணுவந்தோ னரு ளான் வேலோன் விமலதடா தகைவயினுக் கிரனு றென்றோர், நன் மகவாச் சடையொடுமுற் பவிக்க மோலி நனிகவித்தான் கோச்சடில வருும னென்றார். (கo)

## கக-வது வளைசெண்டுவேல்கொடுத்ததிருவிளையாடல்.

தாவறுமுக் கிரன்றலையிற் புவிவன் பாரந் தாங்கெனவைத் தரு ள்புரிந்தங் கிமையோர் வேந்த, னேவமுடி சாடுகென வளையுந் தந்து நூக்குகடல் சுவறவெறி யெனவே லீந்து, மேவருகந் துகம்போல

விமையோர் வாழ்பொன் மேருவினை யடியெனவன் ஜெண்டை நல்கித்,தேவர்புகழ் மணம்புணர்வித் தமலை யோடுஞ் சிறந்தகணத் தொடுமறைந்தான் செழிக்க வையம். (கக)

கஉ-வது நான்மாடக்கூடலான திருவிளையாடல்.

தாணுவலி யறிவானங் கெண்ணி யேவுந் தடங்கடலைச் சுரர்சித்தர் மனிதர் நாகர், பூணரவா வெனுமுன்விடக் குடித்த வென்றிப் புட்கலா வருத்தமுதற் புயல்க ணைகை, மாணுறுமா மழையையே வுறநான் மாட மாக்கிவலி தொலைவிக்க விகல்விட் டேகி,நாணுமெங் தாழ்ந் தருச்சித்தான் வருணன் றூய நகரினையு நான்மாடக் கூட லென்றூர். (கஉ)

கங-வது சித்தரான திருவிளையாடல்:

மாத்திரைபொக் கணம்யோக பட்டந் தோடு மதுரையினெல் லாம்வல்ல சித்த ராகி, யேத்திமட வாரெல்லாம் வீதி தோறு மினவலைசிந் திடவெங்கும் வந்து லாவிச்,சோத்திமெந் நாட்பிடிப்ப வகப்படாது சென்றுமருத் தின்றிசைக்கல் லிபத்தின் பாங்கர்,தோத்திரஞ்சேராலையத்துட் டென்னர் கோமான் றெழுதிவான் வரமுதியர திருந்தான் சொக்கன். (கங)

கச-வது கல்லானையைக்கரும்புதின்னுவித்த திருவிளையாடல்.

வல்லவநீ யர்ச்சனுநீ சித்த னுயின் வாங்குவிகல் லிபத்தால்யாங் காண்ப மென்றே, யெல்லவர்கா ணக்லுகக்கன் னலைக்காட்டிடாமுன் வாங்கியயின் றிதுகமல நாள மென்றே,சொல்லருமார் பணிதாள வடமும் பற்றித் துவிளையின் றதிரமுழங் கிடாமுன் சீறும்,வில்லாசனஞ் சிறுதி சயிப்ப வானில் விரைவிறெடு நகைத்தொளித்தான் விமலச் சித்தன். (கச)

கரு-வது அங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.

தவிசுவிரும் பிப்புலவர் வேண்டக் கைம்மாப் பாவறிவ தொருபலகை தந்தே பின்பு,புவிபுகழ்கீ ரன்பரணன் கபிலன் முன்னுப் புகழ்ந்தடைவி னிருந்துதமிழ் வைத்தாங் கெய்தி, விவிதமெனுங் காலநீ ளத்தாற் செய்யுட் டலைமயங்கி மீண்டொருகான்மலைதல் கொண்டாண்டவைபொருந்து டொருள்செய்து கூட்டித் தானு மேறினுற் பத்தொன்ப தின்ம ரென்றூர். (கரு)

கசு-வது கிழியறுத்ததிருவிளையாடல்.

திருந்துசிவ முனிதருமி தளர்ந்தேன் மன்றல் செய்வான்வண் பொருளிலையென் றேத்த விங்குப், பொருந்துமடந் தையரோடுயர் தலைத்து லாவும் புகழ்மாற னணைந்தமணங் கண்டதென்கொ,லருந்த மிழா விதுபொருவப் பாடுவாரோ லளிப்பலென்றோர் பொற்கிழிநற் சபையுட் டேக்க, மருந்தனையான் கொங்கென்றோர் கவிதை பாடிக் கிழியறுப்பான் வழங்கியொப்பித் தனன்கீழ் நின்றே. (கசு)

கஎ-வது நக்கீரனைக்கரையேற்றின திருவிளையாடல்.

நாவலரன் பர்கள்பிழை பொறுக்குஞ் சொக்கே நக்கீரன் பிழை பொறுத்துன் னுதற்கட் டியால், வேவுறச்சுட் டிடுதுயர்தீர்த் தருளை நல்கி விளங்கியசொல் லெனும்புகழுந் தாதி கேட்டுப், பூவைகயற் கண்ணியொடும் பொய்கை மேவிப் பொன்மலர்ச்செங் கைகொடுத்துக் கரையேற் றென்றே, தேவர்புக ழாலயத்துட் சென்று போற்றத் தேவியொடுஞ் சென்றுகரை யேற்றி னனே. (கஎ)

கஅ-வது குறுமுனிக்குத்தமிழுணர்த்த திருவிளையாடல்.

ஒண்கவிகுன் றும்பின்ன முறுகீ ரற்கிங் குரைதமிழ்நூ லருள்பவர்யா ரெனவெம் மனனை, திண்புவிப்போந் துயர்தருதென் றிசைவை கென்று தென்முனிக்குக் கயிலையின்முன் புகன்ற ஞான்று,விண் புகழ்முத் தமிழுணர்த்தா யென்றிறைஞ்ச விளம்பியயான் மறந்தனனீ நினைத்திருந்தா, யெண்வழிநன் றென்றவற்கு முணர்த்து வாயென் றியன்முனிவா வெனவழைத்து ளுபதேசித்தான். (கஅ)

கசு-வது ஊமைப்பிள்ளை தமிழறிந்த திருவிளையாடல்.

சங்கத்தா ரிறைவனார் பொருட்கே ஞெருந் தகைமைபெற வுரையெழுதி மலைந்து முன்சென், றெங்கட்கீ தறிபவனே நல்ல சொல் லென் றியம்பவெல்லா மறிவனிவ்வூர் வணிகன் மைந்தன், றுங்கவுருத் திரசரும னூமன் றன்னைத் தூயமண்ட பத்திலைவைத்துச் சொன்மி னன்மைக், கங்கமுறும் புளகெனப்போந் திருத்திக்கண்டே யக்கீரன் முதன்மூவ ருரைகொண் டார்கள். (கசு)

உ0-வது இடைக்காடன்பின்போன திருவிளையாடல்.

கூறுமிடைக் காடனியற் கவிதை பாடிக் கொடுகாண மன்னிகழ்ந்து தள்ள நொந்தே, வீறுயரா லயத்தணுகிப் பொருணீ சொல்லுன் மெலியலென மறைபுகலு மிகந்த துன்னே, மாறகலுன் றேவியைமற்

றிலேயென் றேத்தி வரைந்தேக யானுமே குவலென்றேகி,யேறியசு ங் கத்தொடிரும் தழைப்பப் போந்தானிடத்தைவட திருவால வாயெ ன் றார்கள். (உ0)

உக-வது கடல்சுவறவேலெறிந்ததிருவிளையாடல்.

சீல்மது ரையையாழி கொள்வான் மேவச் சிவனருண்ஞா னக்க ண்ணுறீ கண்ட போதே, யேலவரும் கனவினிலுக் கிரமா றன்பா லெய்தியரும் புதல்வகே ளெதிர்சென் றேகின், ஞாலமொடுங் கழிய வருங் கடலை யாமுன் னுதவுவே லெறிந்துசுவற் றென்றுபோதும், வேலைசுவ றிடவேலை யெறிந்தா னும்ம் வேலைவடி வலம்பகின்று னென்று ரன்றே. (உக)

உஉ-வது வலைவீசிமணஞ்செய்ததிருவிளையாடல்.

அம்பிகைக்கா கமங்களியம் புங்காற் கேட்ட வரியபொருண் மற ந்திடக்கண் டமலன் சீறி, வெம்பரதர் குலத்துதிபோ கெனவு தித்த மெல்லியைக்கொள் வானுருக்கொண் டணுகிக் கேட்பக், கம்புததிக் கொலைமகர வரையொன் றுண்டெங் கவலறநீ வலைவீசிப் பிடித்து வந்தா, னம்புதரு குவமெனவம் முறையி னேறு [illegible] பிடித்த டைவின் மணஞ்செய் தானல். (உஉ)

உ௩ - வது வளையல்விற்றதிருவிளையாடல்.

மாதவர்க ளாச்சிரமத் தெய்தி மாதர் மாமைகவர்ந் தவர்கொழு நர் சவிப்பப் போந்தே, கோதையரந் தீள்வணிகர் குலத்தி லங்கக் கோலவளை வணிகனுக் கூறிச் சென்று, வீதியின்மா லாக்கிச்சு லாக் கித் தீயின் வீழ்ந்திடவா ஞெருப்படுங்கால் விருப்போ டஞ்சி, யாதியு ழுமறைந்தொருதன் னுருவங் காட்டி யவருவப்ப வுயர்குலமென் ற ருளிச் செய்தான். (உ௩)

உச - வது விடையிலச்சினையிட்டதிருவிளையாடல்.

காடுவெட்டி யென்பானோர் பழுதில் சோழன் கனபடையோ டெய்திவைகை வடதீ ரத்தி, னடிவணங் குதற்கிரங்க வல்ல சொக்க னயந்திரவு பகலாக்கிச் சென்று மாற,னீடுகயல் பொறித்தடைத்த வ டபால் வாயி னெடுமதிலி னேடுமுரித்துக் கொணர்ந்து தான்றன், சேடுருவங் காட்டிவிடுத் தடைத்தா னேற்றின் றிகழுமிலச் சினைவா யி லெனப்பொ றித்தே. (உச)

## உரு-வது மாணிக்கம்விற்றதிருவிளையாடல்.

செழியர்குலத் தருளினு லுதித்தோர் மைந்தன் செலும்பருவ மைந்தினடல் வேட்டைக் காட்டிற், றழியபுலி தாதையைக்கொண் டே கீ வங்குச் சார்பில்லாப் புதல்வர்நிதி கவர்ந்தே கக்கண், டொழிவின் முடி சூடுவான் மறைத்துக் காத்த வமைச்சர்முடிக் காமணியின் றென்றே யுங்காற், கொழிதமிழ்தேர் பட்டினத்துச் செட்டி யென்று கொணர்ந்துவிற்றான் மாணிக்க மவுலி சூட்ட. (உரு)

## உசு-வது யானையெய்ததிருவிளையாடல்.

தவறறுமீ னவனையொரு சோழன் சென்று தன்படையால் வெலமாட்டான் சமணர் தம்மாற், புவனிவளர் மதுரையையோர் கவளமாகப் போந்துவிழுங் கெனவிட்ட களிற்றை வீழ, வெவர்புகழ்பே ரட்டாலை மீது நின்றே ரேவிடக்கண் டியானைமலை யென்றான் றன்று, குவைகொள்சொரி யிலத்தியிலத் திமலை யென்றார் கோறெட்டா னட்டாலை வீர னென்றார். (உசு)

## உஎ-வது வாதவூரருக்குபதேசித்ததிருவிளையாடல்.

கானகம் சூழ்லொருவன் விடையிற் போந்து கமழ்மதுக மகிழ் வாத புரத்து வாழ்ந், தணராமாத் தியர்குலத்துட் டோன்றி மாறன் றனக்குரிய மந்திரியா யிவுளி கொள்வான், வணமார்பொன் னேடு பெருந் துறைசேர்ந் தாரான் வழங்குபதே சமும்பெற்றுத் தமிழ்பாடித்தன்,னிணையாந்தொண் டருக்கிரும்பொ னீந்தே சென்ன வேகினன் றென்மதுரை வேந்தன் றன்பால். (உஎ)

## உஅ-வது நரியைக்குதிரையாக்கியதிருவிளையாடல்.

வருமிவுளி யிடம்போதா மதுரை யென்றோர் மண்டபத்து மாறனுயர் சிறப்பின் வைகி, யொருமையொடு வினவவரும் வருமென்றோதிப் பரதவிப்ப வுரைத்துவிட்ட முறைசெய் வோர்க, ளிருநிலெனக் கொடுந்தண்ட மாற்று ராகி யின்புறுவர் சகமோத விரங்கிச் சொக்க,னருநரிமா வாய்க்கொணர்ந்திட் டுகைத்துக் காட்டி யாடையும்வாங் கிப்பரிமாற் றறுதி யென்றான். (உஅ)

## உகூ-வது குதிரையைநரியாக்கியதிருவிளையாடல்.

அருளாற்பந் தியிற்கட்டும் பரிக ளெல்லா மருக்கனெழு முன்னிமையோர் நகைப்ப வாழ்ந்த, பொருளாரம் புவிமாறன் பொருமியேங்கக் குறுநரியாய் நெடியகுரல் காட்டப் போந்து, மருளாருக்

துறையாள ருரைப்பச் சால மகிழ்ந்திருந்த மன்னவன்போல் வாதவூ ரர், வெருளாதுண் மகிழ்ந்தறியார் போன்று செல்ல வெகுண்டுக ண்டு சிறைவைத்தான் மிகவுஞ் சீறி. (உசு)

## ரு0-வது மண்சுமந்த திருவிளையாடல்.

மீதுயர்ந்து பௌவமெனப் பெருகும் வைகை மேன்மைநதி யு டைப்படைப்பா னடைந்த வம்மை, யாதரிக்கும் பிட்டுதிர்க்கு மண் சுமந்தாண் டடிபட்டம் மாறெங்கும் படவிதேதென், ருேதுங்கா ன் முனியைவிடு விடென்ருேர் வாக்காங் குயர்வான்ருேன் றச்சிறை விட் டழைத்துள் ளஞ்சிப், பாதமல ரிறைஞ்சிதும்மிச் சையிற்போ மென்று பகர்ந்துவிட்டான் பெயர்மாற்ருன் மாற்ரு னென்ருர். ()

## ருக-வது விருத்தர்குமாரர்பாலரான திருவிளையாடல்.

வரமுனிவ னொருவன்றன் மகவைப் பாக வதன்வரவே தங்க ண்டீங் கிடச்சீ றுற்ரு, ருரைசெயமுண் டென்ருறி விடுப்பச் செ ன்ருே றுறுசைவன் மகளென்று தொடரனம் மீச, னைவிருத்த ஞய்ப்புகுந்துள் குமார ஞகி நனிமாமி வரவழும்பா லனுமாய்க் காட் டிப், பெரிதுமழ கிதென்றுதள்ள வுருவங் காட்[illegible]பேதைமையுங் கொண்டகன்ருன் வியக்க யாரும். (ருக)

## ருஉ-வது மாறியாடின திருவிளையாடல்.

தென்னனுவந் தறுபத்து மூன்ருய்ந் தேண்ணெண் டிண்கலை வல் லானெனவாங் கணைந்தோர் பட்டன், மன்னியநாட் டிடமறியா ய் வளவ னுமம் வருசகல கலாவல்ல னென்னக் கற்ருங், குன்னுமு ன்னோர் தாள்வருத்தம் பொருெனுந் தீச னொருதாளி னின்றுனென் றுழுங்கு வான்கண், டன்னவட் கீழ்ப்பாலிந் திரற்கு முன்ன மாடினுன் கான்மாறி வெள்ளி மன்றில். (ருஉ)

## ருரு-வது பழிக்கஞ்சின திருவிளையாடல்.

மனைவியொடும் போந்திருந்து வழிக்க ணுன்மேல் வனசரன்முன் னிளியெய்த வம்பு வீழ்ந்து, தனிமரணம் வரவருவே டனைத்த டுத்துத் தலைக்கடைசார்ந் தபயமிடும் பனவ னேடு, நனியிருளின் மணமனை போ யருளா னிறப நமன்பட்ர்மா தினைக்கொன்ற விசேடஞ் சொ ல்லி, யினியிவனைப் பசுவாற்கொல் லுமெனக் கொல்ல வெழில்வழு தி யினுந்தெளிந்தான் மறையோ னுள்ளம். (ருரு)

௯௪-வது மகாபாதகந்தீர்த்ததிருவிளையாடல்.

அன்னையைமன மருட்டியொரு மறையோன் புல்லி யுளவறியா வ த்தனைமண் கொட்டால் வெட்டாக், கனையிருளிற் கொடுபோங்கா ல் வேடர் மாதைக் கைக்கொடுசெல் வாரடித்த புண்ணீமொய்ப்பத், துனைவினின்மண் ணுலகினில்வா வென்பா னின்றிச் சுழன்றுதீவத் தா ற்கடம்ப வனத்தின் மேவத்,தனையடைந்தோர்க் கருள்சொக்கன் வெ றுத்து வேளைத் தவிராமா பாதகத்தைத் தவிர்த்தா னன்றே. (௯௪)

௯௫-வது அங்கம்வெட்டின திருவிளையாடல்.

அன்பர்தமக் கிடர்வருமோ கருணைச் சொக்குண் டாகவெனும் பணிக்கனிடத் தடைந்து கற்குந்,தென்பரவா யுதக்கலைகள் பயில்வோ ர் தம்முட் சித்தனெனுமொருதீம்பன் முற்றுங் கற்று,மின்பரவா சான் மனைகை தொடக்கண் டசன் விருத்தனென்றே வதுநினைந்தாய் வெ ட்ட வாவென்,றென்பகர்வ தவனுருக்கொண் டறைகூ றிச்சென் றி ல்லினுட்போய் மறுகேறி வெட்டி வீழ்த்தான். (௯௫)

௯௬-வது மதுரையான திருவிளையாடல்.

• [illegible] வைதிகன் னெறிபொ ருது விடுமரவை நாகம லை யென்ன முன்னம்,பஞ்சவனோர் கணையினு லெய்து வாயாற் பட க்கக்கும் விடம்பரந்து நகராற் ருது, நஞ்சணிகண் டாவெனச்சென் றேத்தத் திங்க ணறும்விரான் மதுரையென மதுர மாக்கி, வஞ்சகர் பின் பசுவைவிட விடையை யேவி வலிதொலைத்தா னிடபகிரி பசு வெற் பென்றார். (௯௬)

௯௭-வது வெடபுத்தீர்த்ததிருவிளையாடல.

புகலியினில் வைதிகவா ரணமென்றியாரும் போற்றியசம்பந்த ரென்றோர் புதல்வர் தோன்றித்,தகவுமையா டிருமுலைப்பா லமுதமு ண்டு தந்தருண்ஞா னம்பெற்று மதுரை மேவிப், பகவனரு ளால்வி ட்ட மடத்தி விட்ட படுதழன்மாறனுக்கேவித் தணியாவெப்புந்,திகை யமணர் காணவொழித் தொழியாக் கூனுந் தீரகிமிர்த் தார்புனிதத் திருவெண் ணீற்றால். (௯௭)

௯௮-வது கழுவேற்றின திருவிளையாடல்.

திரண்டமண ரெரியினிடை யெழுதி யிட்டாற் றிறல்வேகா வேடுடையார் வென்றா ரென்று, முரண்டருவாதுரைத்தேறி யழல வன்னி முடிகிமிசை யேடெடையும் வேவ வேவா, தாண்டருகல் லே

டெடுத்தார் தம்மோ டின்னு மாற்றினிட வாவென்ருற் றிட்டுத் தங் கள், காண்டருமே டாழிசெலக் காழி யாமோ டெதிரோற வேறினுங் கழுவாய் மீது. (௩அ)

௩௯-வது மெய்க்காட்டிட்டதிருவிளையாடல்.

அடற்படையா ளெனவேண்டு மம்பொ னல்கி யரனடியார்க் கழுதாக்கி யளித்த வென்றிச், சுடர்ப்படைவேற் படைத்தலைவன் கொ ணர்ந்த வீரன் சுந்தரசா மந்தனென்போன் றன்னைக் கூவி, மிடற்ப டைமீ னவனுண்ட படையா வென்ன விமலனுண்டே லவையுண் டென் றுரைத்தோ னுக்காய்த், திடப்படுபுள் ளியுங்காட்டி நாட்டிச் சொக்கன் சேனைகொணர்ந் தரியுகைத்து மெய்க்காட் டிட்டான். ()

௪௦-வது உலவாக்கிழிகொடுத்ததிருவிளையாடல்.

ஈசனையுண் டென்றேத்தி மறையோர் தம்மை யிகழ்ந்திமையோ ரவிவேள்வி குன்றி வானும், பேசுலகம் பொழியாமல் வாடக் கண்ட பெருவழுதி தளர்ந்திரவு துயிலும் போது, நேசமுனி வரைமறந்த தா னின் றுடு கிலேதளர்ந்த தவனைநம்போற் பழிச்சி தென்றுந், தேசொடு கா ணப்பொழியும் பெயும்வா னென்றே செப்பினன்[illegible]ற்[illegible]கிழிக னவில் வைத்தான் சென்றே. (௪௦)

௪க-வது மாமனுய்வந்துவழக்குரைத்ததிருவிளையாடல்.

மகவிலா வொருவணிகன் றங்கை மைந்தன் மைந்தனெனத் தன் செல்வ நல்கி யிங்குத், தகைமைபெற விருமெனவைத் தேகத் தள்ளித் தாயத்தா ரில்லமொடு தனங்கைக் கொள்ள, விகழப்போம் வனிதை மக வொடுங்கோ யிற்போந் திறைவவெனச் செய்திசொல்ல விரங்கி ச் சொக்கன், மிகையறுமா துலனுருக்கொண் டவையி லேறி வேண் டாரை விடவென்ருன் வியப்பி யாரும். (௪க)

௪௨-வது அட்டமாசித்திபகர்ந்ததிருவிளையாடல்.

அரன்கயிலை யின்கணிறைஞ் சியக்கி மாரோ ரறுவருயர் சித்தி யெட்டுங் கேட்குங் காலைத், திருமுறக்கே ளாதுமறந் திறைஞ்ச நீர் போய்த் தென்னாட்டிற் பட்டமங்க லத்தாற் கீழ்வீழ்ந், தூறுைறுகல் லாக்கிடத்திர் நீபக் கானத் துறைகுவம்யா மவனுற்றெண் சித்தி யா வும், விரவவறை குவறுங்கல் லுருநீத் தென்ன மேவினர்க்கு மேவிய றி வித்தா னுய்ய. (௪௨)

சங-வது தண்ணீர்ப்பந்தல்வைத்த திருவிளையாடல்.

பரிவேத்தா வெனும்வழுதி தமையன் கொள்வான் பகர்ந்திடுபெ ண் கொண்டபய ஞெடுங்கூ டிப்போய், வரவேற்று வடநாட்டுப் ப கையும் வென்று வந்துதமிழ் மதுரைகொள்வா னெதிரக் கண்டு, தெ ரிவேகத் துடன்முன்னோன் சொக்கன் டென்று சிந்தித்தேற் றிடச் சென்று பாலை யாக்கி, யரிபோற்றுங் கடவுளனை யினத்தற் சேர்ந்த வரவுவெல வுதவிவைத்தான் றண்ணீர்ப் பந்தர். (சங)

சச-வது இந்திரன்முடிமேல்வளையெறிந்த திருவிளையாடல்.

மன்னவர்மூ வரும்வரவிந் திரனங் கென்னீர் வந்ததென விருவர் மழை யென்று போற்ற, வுன்னுமுன முதவியுரை கொடாத மாறற் குறுவலிகாண் பாரூர முதவப் பூண, வின்னருளா லிருந்துளங்கண் டேகு மென்ன வேகினருள் வழுதிபுய லரசர் தம்மை,மின்னிசு மிட வவனெந் தோலை போக்க வேளாளர் பிணையில்விட்டான் மழைமல் கிற்றால். (சச)

சரு-வது பொன்னனையாளுக்கருள்புரிந்த திருவிளையாடல்.

பூவணத்திற் பொன்னனையாள் பதியி லாண்முன் புனிதனுருக் கும்பிடுவாண் மெழுகு சாத்தி, மேவணகற் பொருள்பெறாள் சொக் குண் டென்று மிகவருந்துங் காற்சித்த ராச்சென் றுண்டு, மாவணை வல் லிரும்புதரச் சொல்லித் தீயின் மாட்டென்று பரிசனஞ்செய் தொளித்தான் றந்து, பூவணத்தாள் சொலிச்செய்திறை யுருக்கண் டாண்மெய்ப் பத்தியெழில் கன்னடள்ளி முத்தங் கொண்டாள்.(சரு)

சசு-வது சோழனைக்கொடுவெந்தாழியிலாழ்த்தியதிருவிளையாடல்.

செம்பியன்றென் மதுரைகொள்வான் றிறங்கள் பேசிச் சென்ற டர வெந்தையுண்டென் றிசைக்கு மாறன்,றம்பமென வவனெதிரே தோன்றச் சொக்கன் றுண்டுபரி மேல்வேடக் குதிரை யாளாய்,நம்பு விசை போந்துபரி காட்டிக் காட்டி ஙனிபாய்ந்து மேறடத்துத் தீரத் தேற,வம்பினுடன் பாய்ந்துகுசை தாங்காச் சோழ மனைக்கொண்டா ழத்தடங்கொண் டாழியென்றார். (சசு)

சஎ-வது திருவாலவாயான திருவிளையாடல்.

ஓங்குபிர ளயத்தச்சுக் குலையா லாறிங் குயர்ந்திடநிற் றலினடு வூ ரென்றார் மாறி,சிங்கியபின் னொருசெழியன் றோன்றிச் சொக்கே சிணைகருக் கெல்லைகாட் டென்று போற்றப்,பாங்குபெறக் காட்டெ

ன்று விட்ட பாந்தள் படியினில்வாய் வைத்துத்தன் கதியாற் சூழத், தேங்குபுகழ்ப் பதிமுடங்கல் வாய்வைத் தத்தாற் றிருவால வாயாலு வாயென் றூர்கள். (சஎ)

சஅ-வது வரகுணபாண்டியனுக்குப்பிரமகத்திதீர்த்துச் சிவலோகங்காட்டியதிருவிளையாடல்.

சினமாவேட் டம்போய்மீள் வரிசித் தாளிற் றிகழ்சிசியில் வழி யுறங்கு மறையோன் றுஞ்சக், கனசரயை பலதருமஞ் செய்து நீங்கக் காணுன்மெய் வருந்துங்கால் வெல்வான் போந்த, வினமார்செம் பிய ற்செயித்துத் தேயங் கைக்கொண் டிடைமருதிற் பிரமகத்தி யொழி த்துப் போகி,மனமார்வண் புவிக்காணக் காட்டென்றேத்தும் வரகு ணற்குச் சிவலோகங் காட்டி னுனல். (சஅ)

சகூ-வது விடைக்குறியம்பெய்ததிருவிளையாடல்.

அன்புடையோ னொருசோழன் மதுரை கொள்வா னனுக்னுங் கண் ளௌந்தளர்ந்தா லயத்துட் சென்றே, மன்பரம னருள்பெற்றுச் சிறிய தானை மருங்குவரப் போரின்கண் பொருவான் போந்த, பொ ன்பரவு முளங்தெளிந்த செழியற் காயோர் பொருகணையா லருகணை யுஞ் சேனை மாளக்,கொன்பரவ வணைந்தறிவான் பொறித்து விட்ட கோவின்விடை கண்டுவிடை கொண்டு போனுன். (சகூ)

ருo-வது உலவாக்கோட்டைவைத்ததிருவிளையாடல்.

அஞ்சியவுன் புடைவேளாண் டிலவ னுரு மரனடியார்க் ககம கிழ மாதுந் தானும், விஞ்சுமனத் தமுதுபடைத் தொழுக மாய மிடி புகுந்தாங் கமுதளித்தன் முட்டக் கண்டே, யெஞ்சினமண் ணிற்ற னிசுங் தருவா ரில்லை யிபவரைக் காட்டாயேன் மடிவே லென்ன,வுஞ் சிடகன். கனவினன்கா ணப்போய்க் காட்டி யுலவாமன் மிகவரிசிக் கோட்டை வைத்தான். (ருo)

ருக-வது அமர்த்திக்காசளித்ததிருவிளையாடல்.

வைதிகத்தை யொழித்தமணர் கையின் வீழ்ந்து மதுரைகொ ண்டு வழுதியைவென் றுலகை யாளுங், கைதவக்கன் னடனையுமண் மழையான் மாற்றிக் காதலினூற் சாத்தொருநாண் முட்டக் கண்டு, பைதலொடு சந்தனைத்தான் முழங்கை வட்டப் பாறையிற்றேய்த் திடு மெய்வணிக மூர்த்தி தன்னை, மொய்சடைமா மவுலியக்க மணிப்பூ ணீறு முழுப்பூச்சா மும்மையா லுலகாள் வித்தான். (ருக)

ருஉ-வது காரியார்பாரியார்பாப்பகுந்துகொண்டதிருவிளையாடல்.

இலகுபுகழ்க் காரியார் பாரி யாரா மிருவர்கவிப் புலவர்வட நாட்டி னின்று, நிலவுபுகழ்த் தென்னனைநன் கவிதை பாடி நேருங்கா ணெறிமயக்க முறக்கண் டீசன், றிலகவடி விடையனாய் நிரையான் மேய்த்துச் செலும்வனத்திற் றோன்றியிது முன்னங் தென்னூர்க், குலகுபுக ழியதென நவின்று காட்டி யுடன்பகுந்து சாத்துதமிழ் மாலை கொண்டான். (ருஉ)

ருங-வது புலிமுலைபுல்வாய்க்கருளின திருவிளையாடல்.

சித்திரைச்சித் திரைக்குவந்து மகவான் பூசை செயுங்காலை மணப்புரத்தை நோக்கிச் செல்லு, மெத்துபுகழ் வணிகன்கண் டவண்டரீத்து வியன்வனத்தை மற்றைநாட் சென்று சொல்லப், பத்தியொடு வருஞ்செழியன் புலிமு லைப்பால் பயந்தபுல்வா யுணக்கண்டு நீசெடமுள்ளா, நித்தியவிப் பதிக்கெல்லை காட்டென் றேத்த நிகழ்சித்த னனவெல்லை காட்டி னானல். (ருங)

ருச-வது விறகுசுமந்துசாதாரிபாடின திருவிளையாடல்.

இசைவல்லா னெனும்பாணன் வடதே யத்தா னெய்திடமா றன்பத்தி ரனைவா வென்றே, வசையில்லா யவனொடுபா டுகவா தென்ன வந்துசொக்குண் டென்றிருப்பப் பாணன் வேந்த, னசைவில்லா வடிமையென விறகு கூறி யனையிருளிற் சாதாரி யிறைவன் பாடத், திசைநில்லா தொளித்துவிடி வதன்முன் போனான் றிறற்பாணன் இளையரொடும் வெருக்கொண் டாங்கு. (ருச)

ருரு-வது திருமுகங்கொடுத்த திருவிளையாடல.

இன்னிசைபா டும்புகழ்ப்பத் திரன்கொ டுப்பா னிறைவனிதி யில்லையென வருந்துங் காற்போய், மன்னுமதி மலிபுரிசை மாட மென்று வரைந்தொர்திரு முகங்கனவி னனவிற் காண, முன்னுதவி நம்மன்பன் சேர மான்பான் முடுகென்று விடைகொடுப்பப் போனான் சால, மின்னுபொருள் வேண்டுவன நல்க வாங்கி மேவியிருந் தனன்வழங்கிச் சொக்கை வாழ்த்தி. (ருரு)

ருசா-வது பாணபத்திரனுக்குப்பலகையிட்டதிருவிளையாடல்.

பெருகுபொருள் கண்டுமனம் பொருறு மற்றப் பெரும்பாணனிருப்பபத் திரனு மன்பா, லுருகுமிசை முச்சந்தி யன்றிக் கங்கு லுறு நள்ளும் பாடுதுமென் றெய்திப் பாட, வெருவுறமெய் நோவக்கன்

மாரியேவ மெய்யன்பு கண்டியாரும் வழுத்தச் சங்கத், திருவமையியற் பலகைதந்தோ னிருந்து பாடென் றிசைப்பலகை கொணர்ந்திட்டா னினிமை கூர்ந்து. (௫௬)

### ௫௭-வது இசைவாதுவென்ற திருவிளையாடல்.

நகையறுபத் திரன்மனைவி முல்லை மாலை நனிவழுதி நினைவுதனைத் தள்ள நாணிப், புவனியிற்றீ பாந்தத்து நின்றுங் தேடிப் பொருவி லொருபாடவொட் கொணர்ந்து தன்பே, ரவையினிற்றோற் றுள்சும ப்ப னென்று பேசி யறுதியிசைத் திட்டவையிற் பாடிச் சார்ந்த, சிவ னருளால் வரும்விறலி மாலை முல்லைத் தேமாலை கழுத்தினிடப் பெ ற்றா ளன்றே. (௫௭)

### ௫௮-வது பன்றிக்குமுலைகொடுத்த திருவிளையாடல்.

உயர்தந்தை யிறந்திடப்பன் னிருவர் மைந்த ரூழ்வினையாற் கா ட்டுறைவன் னியர்கள் போந்தோ, ரயர்வறநோற் றிருப்பமுனி வ ன்சூழ்ந் தேதம் மங்கைகொட்டி யிகழ்தருவோர் தம்மைப் பன்றி, வயினுதிமி னெனமுனிவன் சபிப்பத் தாயும் வந்துதியா முனம்வேட் டைக் காட்டிற் றுஞ்ச, வியலுறுதா யிழந்தகுரு ளைகளீ ராறு மினிது யத்தாய் வடிவின்முலை யூட்டி னானே. (௫௮)

### ௫௯-வது பன்றிக்குட்டிக்கருள்புரிந்த திருவிளையாடல்.

அருளுமையாள் பெரியவனீ சிறிய பன்றி யாகமெடுத் தணிமு லைப்பா லளித்தா யுண்ட, குருளைகளீ ராறுமுய்யும் வண்ணங் கண் பார்த் தருளெனநம் மிறைகருணை கூர்ந்து பார்ப்பத், தெருளுறுவே ளாண்டலைவன் மைந்த ராகித் தென்னனுக்கு மந்திரியாய் விசயஞ் செய்த, மருளறுவன் னியர்பன்றிக் குறும்ப ரென்றார் வளர்ந்தமலை யைப்பன்றி மலையென் றாரால். (௫௯)

### ௬௦-வது கருங்குருவிக்கருள்புரிந்த திருவிளையாடல்.

கொடிக்கஞ்சிக் கருங்குருவி போந்து கூடற் கோயில்வல் லானு ஞ்சூழ் தரவே சொக்கன், படிக்கஞ்சா மிருத்தியுஞ் சயம தென்னும் பகர்வென்றி மந்திரத்தை யுபதே சித்து, மிடிக்கஞ்சாய் கிளைகளோ டு முச்ச ரித்து வெம்பகைவென் றிருக்கெனவந் தினங்க ளோடு, வடி க்குங்கூர் மூக்கலகாற் காக்கை யாதி வலிதொலைக்கக் கண்டிலகோர் வலியா னென்றார். (௬௦)

சுக-வது மகாமேருவிற்செண்டுங்கயலும்பொறித்ததிருவிளையாடல்

அந்தணரை யிகழ்ந்திடுமோர் வழுதி தாங்கு மவனியுளோர் ம ழையின்றி வருந்தல் கண்டிங், கெந்துசெய்வே னெனக்கனவி லீச னெய்தி யிருஞ்செண்டான் மேருவைச்சென் றுணர்த்தி வேண்டு, மைந்துதனந் தறித்தெடுத்துன் கயலு மிட்டு வந்தவரை வாழ்வித்தி யா க மோங்கக், கந்தரவான் பொழியுமெனச் சொன்ன செய்து காலம ழை பொழிதரப்பல் லூழி வாழ்ந்தான். (சுக)

சுஉ-வது சாட்சியழைத்த திருவிளையாடல்.

மல்குபொரு ளுடைவணிகன் கன்னி தன்னை மதுரைவளம் பதி யிருக்கு மருக னார்க்கே, நல்குமெனச் சொலித்துஞ்சக் கேட்குஞ் சுற் ற நகரத்தா ரோலைவிட வந்தோன் பாம்பா, லொல்குமிடை யொ டும்போங்காற் புறம்ப யத்தி லொழிந்தெழுப்புங் கவுணியரான் மீண் ந்து போத,வல்குமனம் பொருதமுன்கொண் மனைவி காண வழைத் தான்முச் சான்றீசன் கிணறு வன்னி. (சுஉ)

சுங-வது நாரைக்கருள்புரிந்த திருவிளையாடல்.

வதிவாவி வற்றமீ னற்றுப் போந்தோர் மாதவராச் சிரமத்தா வியுட்பு காமுன், புதுநீரா டுறுதவமா முனிவர்ச் சூழ்ந்து புணராமீ னலியாது நிற்பக் கண்டு,துதிஞானம் பிறந்துகொலை தவிர்ந்து போ ந்து சொக்கனரு ளுடையனெனக் கோயில் சூழும், விதிநாரை வந்த னையை விரும்பி வாவி மீனொழித்துச் சிவலோகங் கொடுத்தா னன் றே. (சுங)

சுச-வது வேதங்கரைகண்டதிருவிளையாடல்.

பொற்புறுகண் ணுவன்முதல முனிவ ரெல்லாம் போந்துகிரே தாயுகத்தா திக்கண் கூடி, முற்புகலுங் கலியுகத்தி லிறந்த பான்மை மொழிபவர்யா ரொன்றுவரும் துங்கால் விண்மேற், றற்பரமா மது ரைதனி லிருப்பல் வந்தாற் சாற்றுவலென் றருளக்கேட் டணைந்து போற்ற, நற்பரம குருவடிவாய்ச் சொக்கன் வந்து நான்மறையும் வி யாகரணத் தொடுநவின்றான். (சுச)

ஈதுதிரு விளையாடற் சரிதை முற்று மியம்பினமுக் கிரனெனு மோர் தென்னன் சொக்க, நாதனையே நியமமாச் சேவை செய்வா னண்ணுங்காற் கதம்பவனத் திலுதின் றேகித், தாதவிழ்பூம் புன்னைவ னத் திலிங்க மாகிச் சங்கரனு வுடையெனும்பேர் தரித்துப் பாதி,

'மாதொருபால் விளங்கவெதிர் காட்சி நல்கி மன்னியதி சயலீலை புரி யு மென்றும். (சுரு)

மதுரைத்தலவிசேடம்.

வேறு.

பொங்குபுகழ் மதுரேச னநாதிசதா சிவமென்னும் பொருட்கு மேலாய்த், தங்குதுவா தசவந்தப் பொருளாகி யப்பாலாய்ச் சுயந்தா னுகி, யெங்குநிறை சர்வத்ர பரிபூர ணப்பொருண்மா விராச வீசு னங்கவன்மா றடிசான்றென் றெசுர்வேதம் வியாதநூ லடைவிற் கூறும். (சுசு)

வந்தடைந்தோ ரியாரேனு மிருதமின்றி யமிருதமா வசித்துமுன்னைப் பந்தமறு சீவன்முத்த ராயெடுத்த சனனத்திற் பரனே யாக முந்துதவிப் பரநாத பரவிந்து சொக்கலிங்க மூர்த்தி வாழு மிந்நிதி யான்மதுரை யமிர்தபுரி யெனவியம்பு மெசுரு வேதம். ()

வேறு.

ஆழி யாழி கடைந்திடுநா ளமிர்த மதுரை நகர்பரவ வாழி யமிர்த புரியாய தென்னும் வேத மாலயங்கஞ் சூழுங் குலசே கரன்செய்நகர் சுத்தி பெறச்சொக் கன்றரித்த வூழி னிந்து வமுதைவிட வுரைக்கு மப்பே ருயர்சுருதி. (சுஅ)

இடபா சலத்திற் றுணைவரொடு மிருந்தார்ச் சுனன்கல் வியாணபுரத் தடல்வேல் வழுதி மகளாய சித்திராங் கனையை மணந்தடைவின்[றே மிடல்சேர் வரம்பெற் றனன்கூடல் விமலன் றிருத்தா டொழுதென் வடநூல் புராணம் பாகவத மாபா ரதமு மியம்பியதால். (சுகூ)

விண்ணு ரிமையோ ரந்தியத்தின் மிருத்து வரமே தினிப்பிறந்து தண்ணூர் கிருது மாலிகைநன் னதிநீர் படிந்து தமிழ்மதுரைக் கண்ணுர்சொக்கைத்தொழுதிறைஞ்சிக்கருதும்வரம்பெற்றிருந்தேகி யுண்ணு ரமுதுண் டிறவாமை யுற்று ரெனுநூற் பாகவதம். (எ0)

கேத மகற்றுந் தமிழ்மதுரைக் கிருது மாலை நதிதோய்ந்து மோதி வருங்காற் றுறுதிசையின்மொய்த்துவாழ்பல்லுயிரனைத்தும் பாதி மதிவே ணியனருளாற் பாமா முத்தி யெய்துமென வாதி யைந்தாம் வேதமெனு மரும்பா ரதநூ லியம்பியதால். (எக)

வேறு.

புரிவளையங்தளிர்மலர்க்கையங்கயற்கட்பூவையைப்போற் றுலகிலுள்ள பரிபுரத்தா ளாறுசத்தி முதற்சத்திக் கிறைவிபரா சத்திக் காதி விரிபுகழ்சே ரிராசரா சேசுரிசிங் கரசனமே லிறைவி யென்றே திரிபுரசுந் தரிவித்தை யெனும்பொதுமந் திரநூலிற் செப்பு மன்றே.()

நிவந்தோளிருங் கதம்பவனம் பரமசிவன் மூலபரை நிலையாய் வைகு, மூவந்துறைக்கிற் றலமதுரை பரமசிவ னும்பர்தொழுஞ் சொக்க நாதன், பவந்தநுதற் பராபரையங் கயற்கண்ணாள் வேறிலையென் றெடுத்துப் பன்னுஞ், சவுந்தரிய லகரியினி லானந்த லகரியெனச் சாற்றுந் தொன்னூல். (எ௫)

வேறு.

பத்த கோடிமா மந்திரந் தனக்குநான் மறைக்கும்
வைத்த வரதியாங் காயத்ரி மந்திர வடிவா
முத்தி மாநகர் முதல்வியங் கயற்கணு ளெனவே
மித்தை தீர்விசு வாமித்ர கற்பநூல் விளம்பும். (எச)

ஆதி யாகிய வாலவாய்ப் பதிதொழ வணுகி
லோது மாமயிர் களைந்துநீர் படிந்துப வசித்துச்
சோதி யைத்தொழின் முத்தியெய் திடுமெனச் சொல்லும்
வேத மூலமே யாகிய சேதுமான் மியநூல். (எ௫)

வேறு.

பாங்குறுபொற் றாமரைநீர்த் தீர்த்தத்தி லுத்தமந்தற் பரமாந் தீர்த்த
நீங்கரிய பல்கோடி யண்டங்கட் காதார நிலையே யாகித்
தேங்குபுகழ் மாமாயர் வாரிநீ ராதலினாற் சேர்ந்து தோன்றுந்
தாங்குநிறம் பேதிக்கில் விபரீத மெனசசைவ புராணஞ் சாற்றும்.()

உலகுயிர்கண் மருள்விளையாட் டுழலாதின் னருளடைதற் கெண்ணிச் சொக்க, னலகிலெண்ணெண் விளையாடல் புரிமதுரை யதன்பெருமை யரனே வல்ல, ரிலகுசிவ தலங்களுக்கு மேலாகுங் கேட்கமுத்தி யெய்து மீது, பலகலைநூற் றுணிவென்றே யுருத்திரசங் கிதையெடுத்துப் பகரா நிற்கும். (எஎ)

வேறு.

சுரர்குரு மனைவி வயின்மதிக் குதித்த தோன்றலாம் புதன்மகிழ்ந் தெய்தி,விரைகமழ் கதம்ப வனத்துறை சொக்க லிங்கத்தை விதிமுறை யருச்சித், துரகபூ டணன்ற னருளினாற் கிரகத் தொருவனா யோங்கிய கல்விக், காசனும் பதம்பெற் றிருந்தன னென்றே சங்கர சங்கிதை யறையும்.. (எஅ)

வேறு.

சூதசங்கி தையிலுயரெக் கியவைப வகாண்டந்தொ குத்துச் சொல்லு, மாதிசயி லேயிலமலன் றாள்வணங்கி யரிகேட்பா னமர ரேறே,

யேதவுடல் வருந்தாம லெத்தனத்தால் விசேடமுத்தி யெய்துந் தான, மோதுகென வவனுரைகேட் டிறையுரைப்பான் கதம்பவனத் துண்மை யுன்னி. (எகூ)

மாலவகேட் குதிலீலா விபூதிநகர் மறுரையதன் மகிமை சொல்வா, மூலமதாம் விபூதியென்ப தழிவில்லா முத்தியெத் தனத்தான் முற்ற, மேலவரும் தவஞ்சனனுந் தாங்களின்முன் செய்தவர்க்கே யெய்து மானின், போலியமெய் யன்பருக்கே புகல்வததி குய்யமெனப் புகல்வ தானன். (அ0)

பூவுலகி னுயர்ந்தசிவ புண்ணியஞ்செய் தருந்தவங்கள் புரிந்து போத, மேவவரு சரியைகிரி யாயோக ஞானமுணர் விதியி னூற்றிப், பாவனையான் முப்பொருளு முணர்ந்தத்து விதமாகும் பாத்தைக் கண்டாற், ருவின்முத்தி தருந்தலங்கள் பலவவற்றி னொளிதினல்குந் தானங் கூறில். (அக)

அம்பலமா ரூர்காசி காளத்தி விருத்தகிரி யதிக்கி ராம *
மும்பர்புகழ் திருவெண்கா டையாறு வேதவன முயர்கோ கன்ன
நம்பர்திரு வானைக்காக் கேதாரங் கோவரைநற் கும்ப கோணந்
தம்பமுறு மிடைமருது வீமேசஞ் சோமனு நீமிரா மீசம். (அஉ)

இத்தலங்க டனிற்பஞ்சாக் கரம்பிரண வத்தோடு மியையக் கூட்டிப், பத்தியினூற் பன்னீரா யிரஞ்செபித்துத் தரிசிக்குங் காலம் பார்த்து, நித்தியமுஞ் சேவைசெய்து நீங்காமல் வசிக்கிலெய்தும் விசேடமுத்தி, சத்தியமித் தொகுத்ததலங் களின்மேலாஞ் சீவன்முத்தித் தலமொன் றுண்டால். (அங)

தன்னுடலம் வருந்தாது குளியாது செபியாது தவஞ்செய் யாது,முன்னுதற்குக் காலம்பாரத் தந்தந்தக் காலத்தின் முறைதப் பாது, பன்னுமதிச் சடைச்சொக்கைப் பணியாதங் கயத்தனத்தாற் படர்ந்து சென்று, மின்னியவத் தலத்தெல்லை யறியாது மிதித்தாலும் விசேடமுத்தி. (அச)

முன்னொருமா பாதகனந் தணன்றன்னைப் பயந்தமதி முல்லை மாதர்,தன்னைமன மருட்டியுணைந் தொருவாது தாதையையும் வதைத்தோ ராண்டு, மன்னுலகி லவளோடுந் திரிந்தனனிப் படிதிரிந்து ம

* அதிக்கிராமம்-வைத்தீசுரன்கோயில்.

ருவு நாளிற், பின்னுறுமப் பிரமகத்தி யிருப்புலக்கை யெடுத்தடர்ந்து பிரமை செய்தே. (அரு)

அதிபயமுற் றதுகண்டே யுழலுங்கா லாற்றுமுற்புண் ணியத்தி னாலே, மதுரைநக ரெல்லையடைந் தனனடரும் பிரமகத்தி வருதல் காணா, விதுபுதுமை யதிசயமித் தலத்தில்வசித் துடல்விடுவோ மெ ன்னப் போந்து, முதிரறிவு பெற்றிருந்தான் முப்போதுந் தொழுது சொக்க மூர்த்தி தன்னை. (அசு)

கோலமார் பதியிதெனக் குறித்தறியான் முன்னொருவர் கூறக்கேளா னலவா யெல்லையத் தனத்தினணு கலுமாபா தகம்போ யாதி மூலமா கியதலத்தில் வந்தவுடன் முன்செய்வினைப் பவமு நீங்கிச் சீலமா தவர்பரவு சிவன்முத்த னானனுட் டெளிவு பெற்றான். (அஎ)

இதப்படநா மாடுறுகின் மாலியதீர்த் தம்படிந்தஞ் செழுந்தை யோதிப், பிதக்கணத்தி னுயர்ந்ததங்கப் பிதக்கணமென் றறிந்துபிதக் கணமுஞ் செய்து, முதற்பொருடேர் மெய்யன்பர் பாததீர்த்த மும்ப ருகி முன்னி வைகித், திதப்படுமுத் தியையடைந்தா னமதருளா லமு தலிங்கஞ் சேவை செய்து. (அஅ)

இன்னுமுள வயத்தினத்தான் முத்திதருந் தலமெனவே றெணலீ தன்றிப், பின்னுமொரு தலமுளவோ நிச்சயமித் தலமென்றே பின்னு ங் கூறுந், தன்னிகரித் தலத்தினின்மா தானமருந் தவம்யாகந் தரும மோமம், பன்னுசெபம் பூசையற்பஞ் செய்திடிலொன் றனந்தமிவை பகர்ந்தேதுமுண்மை. (அகூ)

உவ்வேளை யவ்வேளை யுவந்துதொழுங் காலமென வூன்றி யெ ண்ணா, தெவ்வேளை யிற்றொழினு முத்திதருஞ் சத்தியமீ தென்றா ன ந்நா, ளவ்வேளைக் காய்ந்தபிரான் புகல்வதுகேட் டகமகிழ்வா லவன் றன் போற்றிச், செவ்வேளைத் தன்மருக னெனவுடையான் சிந்தித் தான் செழுந்தென் கூடல். (கூ0)

ஈதன்றி நித்தியவி பூதிநக ரென்றியம்பு மியம்புங் கூடல் யாதென்று வினவுதிரேற் றேன்றுவவெல்லாமொடுங்குமக்காலத்துந் தீதின்றி யழிவில்லா திருத்தலினாற் சிவனுமைக்குப் புகன்றதாக நாதனருணங்தியரிக் குணர்த்துவன்கா ரணமதற்கு நயந்து பின்னும்.

அண்டபுரு டற்குமற்றைத் தலங்களவ யவம்பிரம ரந்திரத்தி ற், றண்டமதி வேணியுறை பெருங்கயிலை யதற்குமேற் றுவாத சா

ந்தத், தெண்டகவே யழிவில்லா நித்யவிபூ தித்தலமெப் போதுமோ ங்குந்,தண்டமிழ்த்தென் மதுரையென்று னெனச்சூத சங்கிதைசத்திய மாய்ச் சாற்றும். (௬௨)

எத்தலத்தி னும்விசிட்ட மதுரையென்றுன் மாதவத்தோ ரியம்ப ல் கேளீர்,வித்தகனு ராப்புறத் தொட்டிநின்மா லியதீர்த்தம் வியன்பெ ற் றோங்கு, மத்திவுறை மிருத்திகைவெம் பிணியெல்லா மகற்றுமெ ன்று யமற்றைத் தேர்ந்து, முத்தமிழ்மா தவவிரித்து மொழிகென்று ரவன்றெருத்து மொழிவ தானன். (௬௩)

புறத்தொட்டிநின்மாலியதீர்த்தமகற்றுநரக
சேடானுபவவியாதிகள்.

வேறு.

அங்கிநீர் விட்ட வித்தோர் சொலித்திடா வழற்குண் டத்திற்
பொங்கிய வோமஞ் செய்தோர் நடுவிடை விட்ட புல்லர்
தங்கிய வங்கி மாந்த நோயினர் தனியன் பில்லாப்
பங்கம்வந் துறவே பந்தி வரைந்துணும் பதகப் பாவர். (௬௪)

வாயுவோ டங்கி மாந்த மரோசிகந் தலைநோய் வாட்டு
நோயினர் நறிய வன்ன நிறைகனி காய்மற் றுள்ள
வேயுற வுடனுண் போருக் குதவாதுள் ளிருந்து துய்த்தோ
ரோயுறு சந்து வாத மனப்பீழை யுறுநோ யாளர். (௬௫)

அருந்தித்தா மூன்பு பின்பு பெரியோரை யருத்து வித்தோர்
பரிந்தநெஞ் சுளைவி னோடு படுமெழு நாயி றென்னும்
வருந்துறு நோயக் வந்த விருந்திற்கு வழங்கா துண்டோ
ருருந்தெழுங் கபோல ரோகங் கன்னோசி யுறுநோ யாளர். (௬௬)

இளைஞர்வந் திடிலொ ளித்தோர் கிளர்தரித் திரரோ கத்தோ
டிளைவுறு நயன ரோகங் குண்டல்கண் டகுசை யுற்றோ
ரளைசுர சாத நோயோ டரோசிகர் களவா லன்னம்
வளமுறத் துய்த்தோ ரத்தி மயமாக்கும் வற்ற னோயர். (௬௭)

ஒருவனைத் தள்ளி யன்னு னுண்பதற் குரித்தா மன்ன
மருவருப் பின்றித் தாமே வலியினு லயின்றோ ரோதம்
பருவரு முடலில் வீக்கம் படுத்துகா மாலை நோயர்
மருவுமன் னியர்ப தார்த்த மடமையால் வலிதிற் றுய்த்தோர். (௬௮)

தெளிவிசு வாச பாதர் திவிர சத்தி நோய
ரஸிதக வுறும்பி ரேத சிராத்தத்தி லயின்றோ ரன்ன
மெளிவரும் வஞ்ச நெஞ்சோ டநாசார மியைந்து செய்தோ
ருளேயும்வெப் புறுத்துங் கன்னக் கிருமியென் றுரைக்கு நோயர். ()

அரனடி யார்க்கென் றுக்கு மன்னத்தைக் களவாற் றுய்த்தோர்
பீரையிவை யென்றெ ணுது புசியாது புசித்தோர் வெம்மைப்
பரமுறு கண்ட நோயர் படுமலங் கழித்தவ் வெச்சி
றிரமுறக் கழுவா முன்னூண் செலுத்திஞேர் கிராணி நோயர். (க00)

இனியபால் கரவிற் றுய்த்தோ ரிடையுநீ ரிழிவு நோயர்
பனிமதுப் புசித்தோர் சொத்தைப் பற்குத்து நோயர் வேசை
வனிதையர்ப் புணர்ந்தோ ராக்கை வருந்துறு கிரந்தி நோயர்
புனிதமாப் புசிக்குங் கல்லேக் கிலேகரந் தெடுத்த புல்லர். (க0க)

எங்கவே யறுப்புண் டாறு விலிங்கபின் னமதா நோயர்
நீங்கலுற் றிடுமூ னுண்டோ ரொருவர்கிங் தனையைச் சொற்றோர்
தாங்கருங் கலக்கங் கொள்ள யாரையுந் தனிபீ டித்தோர்
வாங்குதற் கரிதா யூந்த மலிதரு கயரோ கத்தர். (க0உ)

அலவன்கா லொடித்தூன் சால வருந்திஞே ரழுகிக் கைகா
னிலேகுறைந் திடவே வாட்டு நீங்கருந் தொழுநோ யோடு
புலவுநீ ரொழுகி மாறும்பொங்குவெண் குட்ட நோயர்
பலவுமென் பகர்வ தன்னோர் பீடித்துய ரெவரே சொல்வார். (க0௩)

வேறு.

உவவினிற் பிதிர்நா ளினின்மனச் செருக்கா லொண்டொடி மாதரைத் தோய்ந்தோ,ாவமுறு விழிகண் குருடொடு மாவி யயர்வுறு மண்டவா தத்தர், கவலொடு கிரணத் தன்னிய மடவார்ப் புணர்ந்தவர் கபக்கய ரோகர், தவறறு மயலார் வாழ்ந்திடப் பொருதோர் சன்னிபா தக்கய ரோகர். (க0ச)

பூத்தவா ருச மாதரைப் புணர்ந்தோர் புரைபடு பவுத்திர நோயர், கார்த்தொரு வரையா யத்தடித் தவர்கைக் கிரந்திகை வாதரோ கத்தர்,தீர்த்தனு லயத்திற் காமத்தை விளைத்தோர் செறிமுட ரோமமெம் பிணியர், பார்த்திடார் நீதி திவாவினிற் புணர்ந்தோர் பற்பல வாதரோ யாளர். (க0டு)

இழுகிய வெண்ணெய்த் தலையொடு காம மின்புறின் மலசலங் கழிக்கின், விழுகுறு முடைசேர் நரகினிற் புகுத்தும் வெள்ளொளி யிலங்குபல் விளக்கி, னெழுகுபூப் பெனவா ரூசநா ளொருவன் றுண்டெனு தன்னவை புரிவோ,ரழுகுமூ லத்தோ டழிவுறும் வெகுநீரிழி வெனுங் கன்மரோ யாளர். (கoரு)

மனைவியைத் தொடாது வையைதுளோர் கழுத்தி லெழுந்தவல் கழலைரோ யாள, ரனைவருந் தொழுமெய்ஞ் ஞானியை நிந்தை யறைந்துளோர் பெரும்பித்த ரோகர், வினைவழி வரும்பா ரியர்க்குளாங் கொருத்தி யாசையான் மற்றையர் வெறுத்தோர், நனைமலர்க் குழலார்க் காகொளு வலிநோ யொடுமுடை நாற்றநோ யுடலர். (கoஎ)

தன்மனை யாளை முகாதஞ் செய்வித் தவர்தாமு மத்தொழில் செய்தோர், கன்மமார் வழுக்கற் கொடித்தலை யாக்கிக் காட்டும்புண் சிரோகுட்ட ரோகர்,புன்மைசேர் முடையிந் தியம்புசிப் பித்தோர் புகல்குறி சோர்தரு மலிநோய், பன்மலர்க் குழலார் வெறுத்திடுந் தாது நட்டநோய் பாண்டுரோ கத்தர். (கoஅ)

கற்புடை யயலார் மனைவியைப் பார்த்தோர் கண்ணிற்றூண் ணூற்றறு நோயர்,முற்படு நல்ல பாம்பினை வதைத்தோர் மொய்விடப் பாகவெம் பிணிய, ரற்பொடுந் தன்னொ டுதித்தவட் புணர்ந்தோரடர்வெகு நீரிழி வாளர், வற்பொடு பயந்த வன்னையைத் தோய்ந்தோர் மதுப்பிர மேகரோ கத்தர். (கoக)

மருகியைச் சிறிய தாயரைத் தாமுண வணங்குதற் குரியநாரியரைச், சருவியே யணைந்தோ ரோய்ந்திட விசிக்குஞ் சந்துவா தக்கொடும் பிணியர், குருவெனுர் புணர்ந்தோர் தொழுகுல மாதைக் கோரமா கிரந்திநோ யாளர், வெருவிடா தீவையி லபூனவா யுவிட்டோர் மிகுசூலைக் குச்சவெங் நோயர். (ககo)

கன்னியை யயற்பின் னியைவித வையைநாற் கால்விலங் கினைத் தனி புணர்ந்தோர், றுன்னியே சுறுக்கொண் டுற்றுநீர்ச் செறுப்பு நோயர்சொற் கன்னியர்க் கலந்தோ, ரன்னியர் மனையை நாடின ருயிர்கொன் றருந்தினர் செய்நன் றி கொன்றோர், மன்னுநண் பினர்க்குக் கபடமே செய்தோர் வருத்துறுங் கருங்குட்ட ரோகர். (ககக

பரிவொடுந் தனைச்சே வித்தவன் மனையைப் பரிசித்தோ ரங்கைவா தத்தர், குருமனை தொட்டோர் கருவிடை யழித்தோர் கொடிய

தா மகோதர நோயர், மருவியே தம்மைச் சேவகங் கொண்டோன் மனைவியைத் தேவெனுர் மணந்தோர், கருகியே யாவி பரதபித் தோ யக் காட்டும்வா தாதிக்க ரோகர். (ககஉ)

விரதமா மாதர் விரதத்தை யழித்தோர் வேசைபாற் றாதுசெ ன் றெவர்க்குஞ், சரதமாஞ் சந்து பொருத்திநாள் கழித்தோர் தளர் ந்தநீ ரிழிபிர மேகர், சுரதவே சையரோ டளாவியே சதுரங் காதி ய சூதவை பொருதோர், புரைதவா வற்ப கேசத்த ரவலம் புரிந்தி டும் புழுவெட்டு நோயர். (ககௗ)

கலந்துவே றிருவர் புணர்ந்திடு மின்பக் கலவியைப் பார்த்துட னிருந்தோர், நலிந்துட னுழுகு நீர்ப்பற்ப ரோக முதலிய நயன வெங் நோயர்,வலிந்துவே சையரைப் பொருள்கொடா தணைந்தோர் நாவித ரொலித்திடும் வண்ணுர், பலந்தருங் கூலி யளித்திடா ர[illegible] யாப் பெரிகுட்டங் கிரந்திபன் னேயர். (ககச)

ஆசையாற் கோயிற் கணிகையர்ப் புல்லி யன்னரை வரைந்துதம் மில்வைத், திசர்சங் கிதிரு னியஞ்செய்தோ ரதனுக் கிடைப்படு மட க்கொடி மடவார், காசுசேர் கயரோ கம்பெரு வியாதி யொடுகடி கு ட்டநோய் பிரமை, சிசியென் றெவரும் பழித்திட வலக்கண் செயு முட ரோமரோ கத்தர். (ககரு)

பொருடுகில் கவர்ந்து கலவிவஞ் சித்தோர் புழுச்செறி யல்குற் புற் றுறுநோய்,சுருளவே வலிக்கும் வயிற்றுறு சூலை தொடருமென் புருக்கிவெங் நோய, ரிருட்டருங் கைம்மை யாகியும் பலரோ டிச்சை யாய்ப் புணர்ந்திடு மாதர்,வெருளுறச் செய்யு மழுகுபுண் குட்ட முத லிய மேம்படு நோயர். (ககசு)

தூய்மையொன் றின்றி யெச்சிலங் கையினுற் றொடாதனைத் தொட்டுட னெடுத்தோ, ரேமுற வாவி மயங்கிடச் செறுக்கு மெக் கிய வயிற்றெட்ட னேயர், காமுற வொண்ணுப் புலைச்சியைச் சேர் ந்தோர் கருதினே ரன்னரோ டயின்றோர், மாமைதி ருடலம் வாட் டியே வருத்து மெரிகுன்ம வாயுநோ யாளர். (ககஎ)

உப்புவெண் ணீறு வெண்கலந் துகில்காற் பாசமூங் கிலைகரந் தெடுத்தோர், மெய்ப்புறப் படித்தோர்த் தூடித்தோர் கஷனம் விளம் பினோர் வெண்குட்ட ரோகர், தப்புறப் பட்டுத் துகில்வெள்ளி கரந் தோர் சதித்திடும் பலகுட்ட நோயர்,செப்பருங் கொடுங்கோ லுரை த்தவர் நாறுஞ் சிவடி நாசிவெம் பிணியர். (ககஅ)

அயலவர் மகவைப் பொறாமையிற் காய்ந்தோ ரன்னியர் பொ ருணவ மணிகண், மயலொடு கரந்த வவ்விஞேர் தூய மகப்பெறு மலட்டுவெங் கோய, ருயர்திரு முறைக ளெழுதவே வாங்கி யுதவி லர் களவினு லெடுத்தோர், செயலறு பிறவிக் குருடுகை வாதந் திமி ங்குவாய் வாதரோ் கத்தர். (கககூ)

ஆவினெய் கவர்ந்தோ ரெண்ணெய்யிற் றுண்டோ ரரும்பொ ருட் கூலியேற் றில்லின், மேவிடங் கொடுத்தோ ரூர்ப்பொருள் கவ ர்ந்தோர் மெலிகண்ட மாலைரோ கத்த, ரேவமில் வங்கங் கரந்தப கரித்தோ ரீளைமேற் சுவாசவெம் பிணியர், நோவுறுங் கொடுங்கோ ளுரைத்தவர் குன்ம வாயுநோய் நுவறந்த ரோகர். (க௨0)

எண்ணெய்தேய்த் திருநீ ராடினர்த், தடுத்தோ ரிரசவர்க் கங்க ரந்துண்டோர், நண்ணிய குற்ற மின்மையை யறிந்தும் யானையு நவிந்துபி டித்தோ, ருண்ணிறை யகற்று மையிரு சிரநோ யொழிவி லா வொருதலை நோயர், தண்ணறுங் கனிகாய் களவினிற் கவர்ந் தோர் சலங்கொள்விப் புருதிவெம் பிணியர். (க௨க)

சோரர்பொய்ச் சோரர்க் குபாயங்கள் பகர்ந்தோர் சொன்ன வன் னவர்க்கிடங் கொடுத்தோர், கோரமே விளைக்கும் பாதரோ கத் தர் கூறரு நேத்திர ரோக, ராருமக் கள்வர் நட்பினர்க் கோறல் வில க்குன ரழிவழக் குரைத்தோர்,சேருறுங் குற்ற மிலருயிர் செகுத்தோர் தீர்வில்கால் கரங்குறை நோயர். (க௨௨)

ஈதலை விலக்கும் பாவிய ரொருகண் ணிழந்தவர் தரித்திர ரோக, ராதரா யடைந்தோர்க் காசைபே சிக்கை விட்டவ ரடைக்கலப் பொருளைப், பேதுறக் கவர்ந்தோ ரிராசவெங் கயநோய் பீடிக்கும் வீக்கவெம் பிணிய, ரோதுமுச் சிட்ட வரைவிலார் விரண வாதருண் முடக்குவா தத்தர். (க௨௩)

அமைச்சரா யரசு கொன்றவர் செருக்கி னநீதியாற் புவிக்கி டர் விளைத்தோ, ரிமைப்பொழு தேனுந் தணிந்திடல் செய்யா திடர் செய்யுஞ் செங்குட்ட ரோகர்,தமைப்பொரு ளென்றே சேவகங் கொ ள்ளுந் தலைவனை நிந்தனை பகர்ந்தோர், குமைத்திடும் வலிய முயலக ன் வலிமுன் கூறும்வாய்க் கிரந்திவெங் நோயர். (க௨௪)

அன்னிய னொருவ னியல்பல செய்யி னரசலா தவனிலிங் கத் தைத், தன்னதிச் சையிலீர்ந் தவராறுப் புண்பர் தனிவிஞே யிலிங்க

வுட் டினத்தர், மன்னுபோர்க் களத்தி லாண்டவன் றுஞ்ச மடிந்தி
டார் புறமிட்ட வீரர், தன்னிய தாகங் குறைப்பிணி திடுக்கம் பிள
வைதுற் றிளைப்புவெங் நோயர். (கஉரு)

பண்பொடு சேவிப் பவர்பொரு டமைநேர் பகைகடி வீரர்பொ
ன் கவர்ந்தோர், கண்படு தொண்டை யடைப்புநோய் கடியு மிராச
வெங் கயக்கடும் பிணியர்,புண்படக் கவிநா வலவரை யவையிற்பொ
ருமையின் வாதித்து மூறித்தோ,ரெண்படு நடுக்கு வாதநோ யுங்கசே
ட்டைநோ யிடர்ப்படு நோயர். (கஉசா)

ஒருவரைப் பாடி யவர்செவிப் புகுத்துங் கவிதைமற் றொருவர்
மேல் விரும்பித், திருவிலார் சாத்துக் கவியெனப் பிணைத்தோர் தெ
ரிவிலா மூங்கைரோ கத்தர், வருபெரும் புலவர் கவிதைகேட் டவர்க்
கு வரிசைநல் காதமோட் டிலுத்தர், வெருவுயிர் நீக்கு மவயிருத் தூ
று சன்னியோ டின்னல்வெம் பிணியர். (கஉஎ)

நயிட்டிக விரத மழிந்துளோர் சுகசன் னிப்பிணி நலிவிய நோ
யே, ரயிர்ப்பில்சந் நியாசக் கோபியர் மூல வெகுளியோ டருங்கய
ரோகர், செயிர்ப்பறு விரத்த மழிந்தயற் பன்னி விதவைதீக் கணிகை
யர்ப் புணர்ந்தோர், வியப்பொடு புசிப்பை விரும்பினோ ரரத்த மூல
நீர்ச் செறுப்புவெங் கயத்தர். (கஉஅ)

துறவியாய் மங்கைபெண் பொருண்மனம் வைத்தோர் சூதுகொ
ள் குத்திரம் விளைத்தோர் ரறவுறு லயங்கள் பரித்தொரு ரிருப்போ
ரரசர்ச்சேர்ந் தோர்குன்றை நோயர், மறமகல் குருவாக இகழ்ந்தவர்
மூகரோ கத்தர்மா நெறியுடை யோரை, முறைவழு வவமா னம்பல
செய்தோர் முடிவில்கால் வாதரோ கத்தர். (கஉகூ)

ஆருட் குருவைக் கடிந்துநீ யென்றோ ரந்தண ரோடுதர்க் கி
த்தோர், நீரறு வனத்திற் பிரமராக் கதையாய் நிற்பது மன்றிவாய்ப்
பிணியர், சீர்பெறு பண்டைத் தேசிகர்ப் பகைத்து மற்றொரு தேசி
கர்ச் சேர்ந்தோர், பூரிய ராவ தன்றியும் வெம்மை பொங்குதா பற்
சுர நோயர். (கங0)

எங்கடேசிகனே பெரியனுங் குரவ னிழிஞனென் றொருவர்த்த
ர்க் கித்தோர், பங்கமா முடக்கு வாதத்தர் பார்த்தோர் கேட்டவர்
குருடொடு செவிட, ரங்குரு நிலைதீர்ந் தாசனத் திருந்தோர் துகில்
போர்த்தா லயம்வலஞ் செய்தோர், மூங்குதீர்த் தத்தின் மண்ணொடு
குளித்தோர் மூங்கைநோய் தரித்திர ரோகர். (கஙக)

தாலைததா யாசா னிவரொடும் பகைத்தோர் சர்வாங்க வாயு ரோ கத்தர், வேதியர் பொருண்மேல் வேசைமே லுள்ளம் வைத்தவ ர் சலப்பிர மேக, ரேதிலார் மனம்பீ டிக்கவே செய்தோ ரின்னற்சி தச்சுர ரோக, ராதியான் மடத்திற் றம்பல முமிழ்ந்தோ ரருந்தொ ண்டை யடைப்புரோ யாளர். (கருஉ)

அந்தணர்க் கொன்றோர் பிறருயிர் செகுத்தே தன்னுடல் பேணி னோ ரசான், மைந்தறு கற்பின் பன்னியா லுள்ளம் வைத்தவர் வா தவெங் கயத்தர், முந்திய வுபதே சமுங்குரு வாக்கு மறுத்தவர் முய ல்பணி விடையிற், சிந்தியார் தவசிப் பிள்ளையாய் வஞ்சஞ் செய்தவ ர் திமிர்வாத ரோகர். (கருக)

புராணநூ லோதும் புனிதனைச் சிவதே சிகனென்றோர் நரனெ னப்புகன்றோர், விராவிய புழுவான் மிகைசெயும் வாய்ப்புண் மிகு ந்தவாய்க் கிரந்திவெம் பிணியர், தராதலம் பரவு முண்மைநூ லுண ர்த்தன் பின்றியோர் தருமதத் தசைகள், பராவியே தூய்த்தோர் நர கசே டத்தாம் பண்பறு மூங்கைரோ யாளர். (கருச)

ஈசனே முதலாந் தேவகா ரியவிக் கினஞ்செய்தோ ரிவர்பொ ருள் கவர்ந்தோ, ராசினன் மறையோர்க் கிடர்செய்தோ ருழலை யா க்குலோ யுட்சுர நோயர், பூசுநீ றணியு மீசனு பரணங் கவர்ந்துபொ ய்க் குரம்பையிற் பூண்டோர், சீசியன் னவரோ யாரெடுத் துழைப் பார் செறிபுழுக் குட்டரோ கத்தர். (கரு௫)

துலங்குமா லவட்டம் விசிறிகள் கவர்ந்தோ ருட்டணம் தக்கவெ ம் பிணியர்,பலங்கெழு மீசன் றிருப்பணி பூசைபடித்தரங் குறைத் ததி நரகர்,கலங்கவே செய்யு மலிப்பிணி வருத்தங் காட்டுறு மருங்கய ரோகர்,நிலங்கெழு மீசன் சமயத்தை நிந்தை நிகழ்த்தினோர் சலவாத நோயர். (கருசு)

இணையிலாச் சிவனுக் கிணைசொலி யிறக்குந் தேவரைப் பரம்பொ ருளென்றோர்,புணையிலாத் துன்பக் கடலிடை யழுத்தும் புழுச்செறி வாய்ப்புற்று நோயர்,மணமுறக் கொடுப்போர் தங்களை யிகழ்ந்தோ ர் புழுக்குடை பல்லுநோய் மலிநர்,பணவிடைத் துயின்றோர்ப் பழி த்துநிந் தித்தோ ருதரவங் கிப்பமும் பிணியர். (கருஎ)

சிவனிடத் துதிக்கு மூவரை நிந்தை செப்பினோர் வியாதிசேர் வ யிற்றர்,சிவமுறு கோயிற் சுற்றினிற் கணிகை காரிய ரொடுகளிப் புற்

ரோர், தவமுற மலச லூாதிகள் கழித்தோர் தலைமயிர் கோதியே முடி த்தோர், பலமெனு தெச்சி லுமிழ்ந்துளோர் பிதற்றும் பழிபடும் பெ ரும்பித்த ரோகர். (கஙஅ)

கோயிலுட் டுமின்றோர் தலையிடி மண்டை நோயினர் குளிர்தீர் த்தத் துறையின், வாயினீர் மூக்குச் சிந்தினோ ரிரத்த பீனசர், நந்தன வனத்தி,லேயுற வெச்சி லுமிழ்ந்தவர் தாலு வாதத்த ரிருந்தவ ரறத்த, ராயுநற் றேவ ரிவருக்கன் பில்லோ ரற்புத வாயுவாய்க் கோணர். ()

பிதிர்தினஞ் சிராத்தஞ் செய்திடார் மிகவும் பீடிக்கு மக்கினி மாந்த முதிர்தரு மிரண வாதநோய் வந்தி நோயினர் முனிந்துபாற் பசுவை யதிர்தரு துக்கஞ் செய்தவர் நாசி கோணும்வா தத்தரார்த் துழுதோர் கதிபெரும் பாரஞ்சுமத்தினோர்சுறுநீர்ச்செறுப்பொடுகெடியும்வாதத்தர்.

களவினு லன்னம் வேதியர் செம்பொன் கவர்ந்தவர் கிரணகா லத்தி,லொளிவளை மாதர்ப் புணர்ந்தவ ரநாசா ரஞ்செய்தோ ருயர்ப சுவதைத்தோர், விளிவுறப் பொசியு மூலரோ கத்தர் விழுப்பசு வழித ப்பி முறித்தோர், தெளிவின்மா பாதப் பேச்சினைக் கேட்டோர் செ விப்புற்றுச் செவிடென் ஞேயர். (கசக)

அந்தண ராசா னருந்தவர் பெரியோ ரறிஞர்தற் சூழ்ந்துடனட ந்து,வந்திட வேறி வரிசை மிவர்ந்தோர் வருத்துமா வாதரோ கத்தர், நிந்தியா வொருவன் றலையிதித் துதைத்தோர் தாகத்தினீருதவாதோ ர், சிந்தியார் சிகர லத்தினீர் முடிந்தோர் சிரத்துநோய் கபாலநோ யாளர். (கசஉ)

புண்ணிலை யறியார் சத்திர மிட்டோர் பூதநோய்த் துர்லகா யத் த, ரெண்ணெய்தேய்ப் பவரைப் பிரித்தவர் கபால ரோகத்தோ டி டிதலை நோயர், கண்ணுகுஞ் சாங்கொரள் றவர்திமிர்ப் புழுவா னவி ந்திடு முதரவெம் பிணிய, ருண்ணுதி யெனத்தீ விடத்தைமற் றொரு வர்க் கூட்டினோ ரக்கினி மாந்தர். (கசஙு)

கண்ணியால் வலையா லுயிர்பல செகுத்தோர் கனிமரச் சோலை யை யழித்தோ, ருண்ணுநீர்க் குளங்கா லணையிவை முறித்தோர் கு றைப்பெரு வியாதிநோ யுடலர்,வண்ணநீர்க் கிணறு விகடட ம்ழித் தோர் வருத்துகீர்ப் பாடுநோ யாள, ரெண்ணடி யற்றூர் சொம்பரி ந் தெதேத்தோ ரெழின்முகம் வீங்குவெங் நோயர். (கசச)

புண்ணினிற் கோலிட் டலைததவா கைக்குத் தாகநல் லோர்க ளைப் புடைத்தோர், கண்ணுபோ ரின்றிக் கபடமாய்க் காயப் பதித் திருேர் பிளவைநோ யாளர், வண்ணவான் மாடு மாந்தரோ முதல வு றுப்பொடிந் திடவலிந் தடித்தோ, ரெண்ணரும் வருத்தஞ் செய்துட ன் முறித்தே யெழுமுறி வாதரோ கத்தர்· (௧௪௫)

கனவிலா வடியா ரைக்கள வுறுந்தும் கடியர்கோ யழுகுபுண் ணு ட்டு, முளைபெல மிலவைச் சுமக்கொணுப் பாரஞ் சுமத்திருே ரூற்று நீர்ச் செறுப்பர், வளமில்பொய்ச் சான்று பொய்வழக் குரைத்தோர் வருத்தும்வாய்க் கிரந்திபுண் ணேய,ரளியர்பொன் மறையோர் சிகை பிடித் தீர்த்தோ ரடைப்புநீர்க் கடுப்புக்கல் லெரிப்பர். (௧௪௬)

செட்டுநீ தியைநீத் தறக்கொடுஞ் செட்டுச் செய்தவர் நிறைதுலை குலைத்தோர், வட்டியை யறவாங் குநர்மட மையிற்றும் வாங்கிய தனிசுநல் காதோ, ருட்டெறு மிரண வாதநோய் குறைநோ யினர் தனி ரகசிய மொற்றித், தட்டறக் கேட்டோர் வெளிசெய்தோர் வரு த்தந் தணிவிலா நெஞ்சுளை நோயர். (௧௪௭)

பிணியராய் வந்த பெரியனை நீத்தோர் பிறங்குகண் கால்கர நோ யர், தணிவறு நயன பாடையர் விறையாற் சன்னைசெய் தொருவருக் கொருவர், துணிவுறு சண்டை மூட்டினேர் வாயிற் றுர்க்கந்த நோ யரு ருணிக, ளணிகெழு மன்ன சாலைநீர்ப் பந்த ரழித்தவர் நீர்க்கோ வை நோயர். (௧௪௮)

எருதுவர் தேறி வழிநடத் தின்வ,ரிடர்செயு மனைப்புண்ணி ணேயர், மருவரு மனத்து வஞ்சகர் வாக்கு மாறினேர் பெரியர்சொ ன் மறுத்தோ,ரநீளுநை கேட்கிற் பராமுகஞ் செய்தோ ரழுகுபுண் குட்டரோ கத்த, ருரைசெயி லநேக நரகசே டத்தா முறுபிணி சுருக் கினா முரைத்தேம். (௧௪௯)

தோற்றிய கபத்தால் வாதபித் தத்தாற் றெட்டுநா லாயிரத் தொடுநா, னூற்றுநாற் பானு லிரண்டுநோய் பவநோய் நவவுதற் கருமினை நோயர், மாற்றரும் பில்லி சூனிய நாள்கோண் மற்றெவற் றினும்பய முற்றோ, ரூற்றிருந் தொழுகு நறைமலர்க் கடம்ப வனத் தில்வந் துண்மையா யெண்ணி. (௧௫0)

தடமலர்ப் பொற்று மரைப்புனன் மூழ்கித் தாவினீ றுருத்திர வக்க, மடைவினி லணிந்தஞ் செழுத்தையுச் சரித்தே யருட்டிரு

வனந்தலிற் ரொழுது, மடவா ருமையங் கயற்கணு யகியைச் சொக்க லிங் கத்தைமுன் வழுத்தித், திடமுற விவர்கின் மாலிய தீர்த்த மிருத் திகை தினமுமுட் கொண்டு. (௧௫௧)

மண்டல மொன்றே னும்மதிற் பாக மேனுநன் னியமமா வழி பட், டுண்டென மனத்தி லெண்ணிலம் மருந்தா வுறுபிணி பாதக மொழியு, மண்டர்நா யகன்ற னருளினு லெடுத்த சனனத்தின் முத்தி யு மடைவர், தண்டலி றவத்திர் கேண்மின்முக் காலுஞ் சத்தியம் புக ன்றன முண்மை. (௧௫௨)

வேறு.

என்ன மாதவத் தமிழ்முனி யியம்புதல் கேளா
முன்னை மாதவப் பேற்றினுன் மொழிதரக் கேட்டே
கின்ன லாவெமக் குரியதே சிகரெவர் கிகழ்த்திற்
பன்னு மாறெமக் கின்னமுண் டெனவவை பகர்வார். (௧௫௩)

அணிவெண் பூதிமற் றுருத்திர வக்கமஞ் செழுத்துத்
திணிவ ருஞ்சிவ காமநூல் சாற்றுறு விரதம்
பணிவு றுஞ்சிவ புண்ணியம் பகர்சிவ புராணந்
துணிவு றுஞ்சிவத் துரோகஞ்சொல் லருஞ்சிவ பூசை. (௧௫௪)

குரும கத்துவங் கூறுமெய்ஞ் ஞானத்தின் றன்மை
யருளு மீசனுக் கற்பித மாகுமீ ரைந்தும்
பொருள்வி ளங்கிடப் புகலுதி யெனத்தவர் புகலத்
தெருள கத்திய னன்னவ ருளங்கொளத் தெரிப்பான். (௧௫௫)

---

விபூதி.

அரந்தை தீர்தவ முனிவிர்கா ளறைகுவங் கேண்மின்
கரந்தை வார்சடைக் கண்ணுதற் கற்புதப் பத்திற்
பரந்த பூதிமுன் பகருதும் பல்லுயிர்க் கெல்லாம்
புரந்து காப்பதும் பாகதி யளிப்பதும் பூதி. (௧௫௬)

வேறு.

எந்தை யநாதி கிட்களமே சகளீ கரித்தின் றிறைவியையு
முந்தை முதல்வி யைந்தொழிலு முறைமியி னீயே யளித்தியெனத்
தந்தம் முதல்வன் சுவேச்சையா யிருந்தா னந்தத் தனிமுதல்வி
யைந்து தொழிற்குங் காப்பாய்கின் னடையா ளந்தந் தருளென்முள்.()

என்று முன்னந் தனைத்தானே யீன்று தருமப் பெயர்சாத்தி
நின்றார் கலையி னுயர்தருகல் லறமே நிகழ்த்துஞ் சிலகலைமுன்
பன்று டவஞ்செய் பாற்கடலிற் பசுவா யுதித்தி யெனப்பணித்தா
னந்நா ளதுசென் றடைந்துதிப்ப வமிர்தங் கடைந்தா ரரிமுதலோர்.

நந்தை சுரபி சுமனையெழி லலஞ்சேர் சுசீலை பத்திரையென்
றைந்து பசுவாய்ப் பாற்கடலு ளரனு ளருளா லவதரித்து
மூந்து சிவலோ கத்தடைந்து முயங்கு மிடபத் தொடுமிருந்த
தந்த வுலகங் கோலோக மதுவும் படிகத் தால்விளங்கும். (௧௫௯)

கோமா தாக்க ளாமவற்றைக் கூறுந் திருமா லயன்முதலோர்
தாமா தரவாற் பூசித்துத் தாழ்ந்து பணிந்து போற்றிடுவார்
மாமா தவத்தீ ரவற்றினது பெருமை யெவரே வகுத்துரைப்பார்
மூவா துறையு முலகிலவை யிருக்குந் தான மிகப்புனிதம். (௧௬0)

துதிசா லந்தக் கோமயத்தை யெடுத்துச் சிவன்சொல் லாகமநூல்
விதியால் விளைத்தந் நீறள்ளி மிளிர்தன் றிருநெற் றியிற்றரித்துக்
கதியார் பூதி யிதுவேகாப் பென்று விமலை கைக்கொடுத்தான் [ளாள்
மதியார் நுதலா டானணிந்தைந் தொழிலோ ரெவர்க்கும் வழங்கின

அருமா மறையின் றுணிவிதுவென் றெருக்கா லுரைத்த தன்ற
ருள்சேர், பெருமா னுருவே வெண்ணீறு பேசிற் பிறிதொன் றிலை
ப்புவனி, புரிமா தவத்தா லிமையவர்க்கும் புகழ்ப்பூ சுரர்க்கும் பூசக
ர்க்குந், தருமா தரவாற் பசுக்கணெறி தழைக்கநிலத்தின்வந்தனவால்.

ஆவின் பெருமை யெவருரைப்பா ரவற்றின் சிருங்க மத்தியினின்
மேவுஞ் சிவனங் கிருபாலும் வேத னெடுமா லுறைந்திடுவர்
தாவி னுனிதங் கீஞ்சர்வ தீர்த்த முயர்தா பரசங்கந்
தூவண் ணெற்றி தனிலமருஞ் சுடர்வேன் முருகன் கணபதியும். ()

மூசு நாசி யிருபுடையின் முயங்குஞ் சேட்டை மொய்செவியி ற,
றேசு பெறுநன் மருத்துவர்கண் ணிணையிற் றிகழ்செங் கதிர்மதிய,
மாசில் பல்லின் மாருதநா வருணன் வசிக்கு மூங்காரத், தோசை பெ
றுவெண் டாமரையா ளுறையுங் கபோலத் தியக்கர்நமன். (௧௬௪)

அதர மிரண்டிற் கந்தரத்தின் மகவா னமருங் குரநடுவிற்
றிதமா ரிசைக்கந் திருவர்நுனி சிறக்கும் பாந்தட் டொலைகுரமேன்
மதர்வா ளரிக்கண் ணரமகளிர் வருமா கணங்க ளினிதுறையும்
பதமார் தசநா டியினுமுருத் திரர்தா முறைவர் பாங்குறவே.(௧௬௫)

யசையார் தருமென் சந்துகளின் பலவா யுக்க ளினிதமரு
நசையார் தருநான் மூலையடியிற் பிதிர்தே வர்கணுன் மூலைநுனியில்
விசையார் தரங்கக் கட்லுனத்தின் மேவு முமைமின் னுத்ரத்தி
லிசையார் தருநன் னிலமகண்மரல் வரைக ளிருங்கா னகமியையும்.

தனிநீள் வாலின் யோனியினிற் றங்குங் கமலை யுரோமமெலா
நனிசேர் தேவர் முனிவர்கண ணுங்கோ மயமே முதலெந்தின்
பனிசேர் மலரோ னுதிசதா சிவமீ றுறையும் பகர்பசுவின்
புனித மெவரே புகன்றிவொர் பொருள்சேர் வேத வடிவாகும். ()

நாவில் கபில நிறநந்தை தவளஞ் சுரபி மறையோர்க்கா
மேவு சுமனை நிறஞ்சிவப்பு விறல்சே ரரசர் தமக்குரித்தா
மேவ மகலுஞ் சுசீலைநிற மிசைதூம் பிரஞ்சொல் வசியருக்காம்
பூவி லுயர்பத் திரைகருமை பொங்கு நிறஞ்சூத் திரர்க்காகும்.(க...)

வேறு.

சாந்தி கம்பவுட் டிகந்தனிக் காமத மெனவு
மேய்ந்த மூவித மியம்புங்கோ மயமெடுத் திவற்றி
னுய்ந்த சாந்திகம் பிரமமோ ரைந்தினு லாவின்
பேர்ந்த யோனியிற் படாதுபூ மியின்விழா தேற்றே. (கசு௬)

எற்ற கோமய மியம்புமந் திரத்தினுல் விளைத்தல்
சாற்றும் யோனியிற் றுக்கிநன் னிலத்தின்வீழ் மயத்தை
மாற்றி மேலொடு கீழ்நடு மயஞ்சடங் கத்தா
னூற்ற மேபெற விளைத்திடல் பூவுட்டிக முறைக்கும். (கஎ0)

புவியின் வீழ்மயம் பிராசாத மந்திரம் புகன்று
விவித மாமுழு வதுமெடுத் துரைத்தமுன் மனுவா
னவையு ருதவை விளைத்திடல் காமத நாதன்
...றி கேட்பமுன் னுரைத்தது கழறுவம் விரித்து. (கஎக)

ஒன்று கற்பமோ டநுகற்ப முபகற்ப மகற்ப
மென்று சிற்பர நீறுநால் வகைப்படு மிவற்றுட
டொன்று கற்பத்தி னீற்றினுக் குரியதாய்ப் பசுக்கண்
டின்ற வத்திறம் புகலுவங் கேண்மின்மா தவத்தீர். (கஎ௨)

ஈன்பெ ருக்கன்னி கொடுவைமூப் பிலக்கண மின்மை
வான்சி னைப்பசு வால்செவி கொம்பறு வந்தி
யான்ம லங்களைப் புசிக்குமா நோய்ப்பசு வீன்று
பான்மை சேர்பதி னைந்துநா ளுட்படும் பசுக்கள். (கஎ௩)

இறந்த கன்றுடைத் தாய்முடங் குருடிருஞ் செவிடு
மறைந்த தீங்கெனத் தகையவீ ரெண்குறை யகற்றி
நிறைந்த நற்குண மழகுமுன் னிகழ்த்திய நிறத்தான்
சிறந்த பங்குனிச் சாலித்தாண் மேய்ந்தவை சிறப்பாம். (௧௭௪)

விடியு மூன்னெழுந் தனுட்டானம் விதிப்படி முடித்துப்
படிபு கழ்ந்திடும் பசுவுறை கோட்டத்திற் சென்று
வடிவ மைந்தகோ சாவித்ரி யென்னுமந் திரத்தாற்
கடிகொள் சந்தமுங் கமழ்நறு மலர்களுஞ் சாத்தி. (௧௭௫)

இலங்கு தூபதீ பங்கொடுத் தினியதா யன்ன
கலங்கொள் பாகிலை நிவேதன நல்கிநற் பசுவைப்
பலங்கொ ளன்பிறைற் பணிந்தருச் சனைபுரிந் ததற்பின்
வலிக்கொண் மந்திரஞ் சதஞ்செபித் தேற்பர்கோ மயத்தை. (௧௭௬)

சாலு மீருவா வட்டமி சதுர்த்தசி கிரண
கால மின்னதில் விட்டகோ மயத்தையக் கணத்தி
ஞாலும் பூமியில் விழாதுமுன் னம்புய விலையா
லேலும் வாழைமெல் லிலைநறும் பலாசிலை யிவற்றால். (௧௭௭)

ஓதும் யோனியிற் படாதுமே லாகவொண் சித்யோ
சாத மந்திரத் தேற்றுமேல் வழும்பினைத் தள்ளி
யாதி வாமத்திற் கவ்வியம் பெய்தகோ ரத்தாற்
போத நன்குறப் பிசைந்துதற் புருடத்தி னூட்டி. (௧௭௮)

பன்னும் வெய்யவோ மத்தினிற் பதடியோ டமைத்து
முன்னு ரைத்திடு மகோரத்தால் விளைவித்து மொழிந்த
விந்தி லங்தொழும் பாகங்கண் டீசானத் தெடுத்து
மன்ன லந்தரும் புதியதா யாடையின் வடித்து. (௧௭௯)

சங்கு பொன்வெள்ளி தாமிர பாத்திர மடைவிற்
றுங்க வுத்தம மத்திம மதமமுஞ் சொல்லு
மிங்கி தன்றியு மண்சுரை பித்தளை யிவையும்
பங்க மில்லதாம் விளங்குமப் பாத்திரத் தமைத்து. (௧௮0)

வண்ண வெண்பொடி யிறையுரு வெனமனத் தெண்ணி
கண்ண ரும்பஞ்சப் பிரமநற் சடங்கமு நயந்தே
யெண்ணு தற்கரும் வியோமவி யாபியென் றிசைக்கு
மண்ணன் மந்திர மிவற்றினு கமவிதி செபித்து. (௧௮௧)

நறிய சண்பகங் கேதகை பலாசம்புன் னைகஞ்
சிறிய சண்பகந் தாமரை துளவுபா திரிப்பூ
வெறிக ருப்புரம் வெட்டிவேர் மருவிலா மிச்சுக்
குறிகொண் மல்லிகை தக்கோலங் கொழுந்துநா யுருவி. (கஅஉ)

தருப்பை யின்னுனி யாகமஞ் சாற்றுமற் றெவையுந்
தெரிப்ப ருஞ்சத்யோ சாதமீ சானமுஞ் செபித்து
மருப்ப யின்றவெண் பூதியுண் மணங்கொளச் செறித்து
விருப்ப முற்றுவெண் ணீற்றின்கா யத்திரி விளம்பி. (கஅங)

சுத்த மாகிய நிலத்தில்வைத் தணிமலர் சூட்டிப்
புத்தி யீதென வண்டுகில் வாயினிற் பொதிந்து
பத்தி சேர்கவ சத்தவ குண்டனம் பண்ணி
யத்தி ரங்தெறித் துத்தேனு முத்திரை யடைவாய். (கஅச)

மூலத் தாற்கொடுத் திடுவரம் முழுவெண்ணீ றெடுக்கி
னேலத் தாஞ்சிவ மந்திர முச்சரித் தெடுப்பர்
ஞாலத் தார்தொழும் பெரியார்முற் கற்பமா நவின்றோஞ்
சீலத் தார்பஞ்ச வில்வத்தால் விளைத்தலுஞ் செப்பும். (கஅரு)

கற்ப மித்திற முத்தம மிருத்தலுங் கருதி
யுற்ப னத்தொடன் றெடுத்தகோ மயத்தையன் றுருட்டி
யற்பி னுக்கினுஞ் செனிறுவே றுணக்கியே யடினு
கிற்ப தப்பெய ரநுகற்ப கிகழ்த்துதுங் கேண்மின். (கஅசு)

இணங்கு சித்திரைத் திங்களிற் சேறிவனத் தெய்தி
யுணங்கு நன்மயங் கொணர்ந்திடித் தூரியகவ் வியம்பெய்
தணங்கொர் பாகனன் றறைந்தமுன் மனுப்படி விளைப்பார்
கணங்கொண் மாதவத் தீருப கற்பத்தைக் கழறில். (கஅஎ)

இலங்கு நீள்வனத் துணங்கிய மயங்கொணர்ந் திடித்து
நலங்கொள் கோசல மொன்றுமே பெய்துமுன் சாற்றின்ற
வலங்கொ ளாகம விதிப்படி மனுமொழிந் தடைவின்
பலங்கொ ளப்பிசைந் துருட்டிவைத் தெடுப்பர்பாங் கறிந்தோர். ()

அகற்ப மாவன வனத்திற்று பாக்கினி யதனால்
விகற்ப மின்றியே யியற்கையின் வெந்தவெண் பொடியை
யுகப்ப வேகொணர்ந் தானைந்தும் பெய்துமுன் னுரைத்த
வகைப்ப டுக்கிறன் மந்திரத் துருட்டிவைத் தெடுப்பார். (கஅகூ)

சான்ற நூல்புகல் சர்வசங் காரகா லத்தி
ரூன்றும் யாவுந்தன் னுதல்விழி யங்கியாற் றொலைத்து
நான்ற வார்குழை பாகனம் மயானத்து நடித்தா
னுன்ற நீறெலாந் தோய்ந்திட மேனியி லவற்றை. (கக௦)

திருக்கரத்தினல் வழித்தெறிந் தனன்றிகழ் விடைமுன்
விருப்பி னுலவை யயின்றந்த விடைதன்வீ ரியத்தை
யருப்பமீக்கொளப் பசுக்கள்பால் விட்டதப் பசுக்கள்
பெருக்கு கோமயம் விபூதிக்கு விசேடம்பே சினவால். (ககக)

நீற்றின் மிக்கது கோமயத் தாக்குவெண் ணீறே
யேற்ற மாயின தாதலிற் காரண மிசைத்தே
மாற்றல் சான்றிடு முனிவிர்கா ளாதியோ டந்தந்
தோற்ற மீறிரண் டிற்குங்கா ரணந்தொகு பூதி. (ககஉ)

வேத ராதிய மூவர்க்கும் விமலனு லயத்து
மோது சூத்திரர்க் குயர்மடப் பள்ளியி னகத்து
மேதந் தீர்குறை யேனையர்க் கடவித்தீ யிடத்தும்
போத வாக்கிய நீறுரித் தாமெனப் புகலும். (ககங)

பரவு நீலந்தீப் பிணிசிவப் பிசையின்மை பகர்தூம்
பிரங் றத்தவா யுகந்தெறும் பீதநல் குரவா
நிரவு மித்திற நிறம்படா தெடுத்திடு நீற்றி
னுரவு வெண்ணிற மெண்ணிலாப் புண்ணிய முதவும். (ககச)

அங்கு லம்மொரு பாணிரண் டியரத்தி னகலந்
தங்கு மெட்டள வாடையாற் றணிப்புலித் தோலாற்
பொங்கு கான்மினை யுரிவையாற் பொருந்தவாய் வட்டந்
துங்க நீறடைத் திடுமொரா லயஞ்செய்வர். தூயோர். (கக௫)

பூதி யாலயஞ் சத்தியன் னதிற்பூனை தருநூ
லாதி நான்முகன் பதிக்குங் கயிறுமா லதனுட்
டீது தீர்தர வுறைவெண்ணீ றருட்சதா சிவமாம்
வேத வாகம மித்திறம் புகன்றிடு மெய்ம்மை. (கக௬)

ஒருகை யிற்கவர்ந் தனதுகிற் றலையின வொருவர்
தருவி லேக்குவாங் கினவதிக் கையாளித் தனமுன்
கருது பூதிகங் கவிழ்ந்துமங் காந்துங்கம் பித்துந்
தெருவெ றிப்பட நடந்தும்பூ சினதருந் தீங்கு. (ககஎ)

அந்த ணூளர்தம் பதாந்தமே யளவுமுத் தூளம்
வுந்த காவலர் நாபிமேல் வணிகரா யவரு
மூந்து பட்டம்போன் மூவிரற் கொண்டெழுந் தாகச்
சிந்தை செய்துருத் திராணி குவர்விதித் திறத்தால். (௧௬௮)

நுதலு ரம்புய நுவன்றிடு நெடுமைநீற் றளவை
மதிகொண் மூவிரு விரற்களா முற்றவற் றென்றுந்
துதிகொள் சென்னிக்குங் காதிற்குந் தொடுதலே போதும்
பதிகொண் மூவிரற் படவணி குவர்பக ருறுப்பின். (௧௬௯)

வளைத வுங்கடு விழத்தலும் வன்மையு மாசு
மளவி யொன்றென்றோன் றுறுதலு மறப்பிரிந் திடலும்
விளையு மூவிரு தீக்குணம் விளங்கநீ றணிந்தா
லுளைவு றுங்குறை யிலாதவர்க் கலக்கண்வந் துறுமால். (௨௦௦)

பூசை மந்திரந் தியானநூல் புரிதவம் வணக்கம்
பேசு நீறின்றிப் பிறங்குமெக் கிரியையுஞ் செய்யார்
பூசி லந்தணர் மகத்தினுக் கனைத்தும்வந் துறினுந்
தேசு றும்விதித் தீயின்றி முடியுமோ முடியா. (௨௦௧)

அரவன் மூன்னுநா லுறைதரும் யாகத்தின் மூன்றுங்
குரவன் முன்னுநீ றணிவது தீதவை குறியார்
பரவு பூதியோ ரணுத்துணை பாரிடை வீழ்ப்பின்
விரவு மெண்ணிலாக் கற்பங்கள் வெந்நர குழப்பார். (௨௦௨)

தொகுத்த வாழ்க்கையாற் பூதியுஞ் சோதிமேற் றலாற்
பகுத்த நூல்புகல் பசிதமும் படுமலம் பிணிமா
கருத்த லாலுயர் கார * முங் காத்தலாற் காப்பு
மிகுத்த தீதுநீற் றிடுதலானீறும்பேர் விளம்பும். (௨௦௩)

...த்த ணிந்திடிற் கழுத்தள வுறுபவந் தீரு
முரத்திற் பூசிடி னுள்ளத்தால் வரும்பவ மொழியுந்
தரிக்கி னுபயி னிலிங்கத்தால் வருபவந் தணியும்
பொருந்து பாரிசத் திடின்மடந் தையர்ப்புணர் பவம்போம். (௨௦௪)

குதத்தி னுக்குமேற் பூசிடிற் குதத்துறு பவம்போம்
விதித்த திண்புயத் திடிற்கையாற் செயும்பவம் வீடுங்
கதித்தி டும்முழந் தாளினி லணிந்திடிற் காலான்
மதிக்க வேவரும் பவங்கதிர்ப் பனியென மாறும். (௨௦௫)

---

* க்ஷாரம் எனனும் வடமொழி காரமென்றாயிற்று.

பாகத் தாலுறு நீற்றினை யின்னமும் பகர்வாம்
யாகத் தானவெண் ணீறுநால் வருணர்க்கு மிடலா
மோகத் தார்வினை களைதரு மீதன்றி முதன்மை
மாகத் தார்தொழு மியற்கைநீ றதிகுய்யம் வழுத்த. (உoகூ)

நீறு பூத்தன னழல்வடி வியற்கைவெண் ணீற்றைப்
பேறு நல்குவோன் மூலகா ரணம்மெரி ததெனு
வீறு பல்லுயிர் நரகுறு வாறுமென் மருந்தாய்க்
கூறி னன்காத் தால்வழித் தம்மைகைக் கொடுத்தான். (உoஎ)

விரித ரும்புகழ் நீற்றினை யறிந்துமே லணியா
ரரிதி னுற்றநீர் பதிதராய் விடுவரந் தணர்க்குஞ்
சுருதி யோதுநீ றிடாமுகஞ் சுடலையம் முகத்தைக்
கருதி நோக்கினா றஞ்செழுத் தோதுவர் கற்றோர். (உoஅ)

வேறு.

ஆலவா யெல்லையினு ளகப்பட்ட சாம்பரிவற் றதிகங் காழிப்
பாலனார் பூழியன்வெப் பமணழித்து வாதுவென்ற பான்மை யாலு
ஞாலமேற் பரவுசிவ சைவசம யம்பொருளா நாட்ட லாலு
மேலவார் குழல்பாகன் றென்மதுரைக் காகுச மின்மை யானும். ()

எங்கீறு பூசினுந்தென் னாலவா யான்றிருநீ றென்றே பூசிற், ப
ன்னூறு கோடிசன னத்தறிந்து செய்தகொடும் பாவந் தீரு, முன்
னூறு படுத்தவரு நமனையுங்கா ணார்முடிவின் முத்தி சேர்வார், நன்
னீறு தனையணிந்தோர் பெற்றவா சிலவுமக்கு நவில்வாங் கேண்மின்.

முன்னமொரு பிரளயத்து நான்முகனு தியரொடுங்கு முராரி
யான்மேற், றன்னகந்தை மிகுந்திருப்ப வவனுதலிற் சங்கரன்வெ
ண் ணீறு சாத்த,மன்னகந்தை நீங்கியவண் மோகினியாய் மருவியுந்தி
வனசத் தின்று, பின்னொருநான் முக்னையும்பேரறிவும்பெற்றான் பி
றிதில்சிவன் பொருளென் றெண்ணி. (உகக)

தீமையுறு பிரமரக்கதனொருவன் பாதகமே செய்வான் முன்னர்
வாமதேவப்பெயர்மா தவனனுகக் கண்டறிவு வாலுந் தாழ்ந்து
தாமநீ ெறாளிருமவன் மேனியைத்தன் மேனியினுற் றழுவி வேளுங்
காமுறுநல் லுருப்பெற்றுப் பூதியுமெய் யணிந்துசிவகதியும்பெற்றான்.

தென்னவனாட் டொருமறையோ னயன்மாதைச் சேரவவன்
கொழுநன் சீறி, யன்னவனு ருயிர்செகுத்தீர்த் தாவணத்திட் டான்
கிடக்கு மவனீ ணெற்றி,தன்னிலட் டையிற்கிடந்த சுணங்கன்கா லி

றுபடத் தரித்த லாலே,கொன்றுறுவே னமன்படைத் தூரர்துகணம் விடக்கயிலே குறுகி றனல். (உகரு)

தன்னையறி யாதுடலி னீறுப்பி சித்தோரித் தன்மை பெற்று,ரென்னிலறிக் தணிக்தோர்கள் பெறும்பயனிவ் வளவையென விசைக்கற் பாற்றே, பின்னுமதிச் சடைமௌலிப் பெம்மானே யிவர்வேறு பிறிதென் றன்று, ஸன்னவரை நரனென்போர் நரகாழ்வ ரமலனென்போ ரானே யாவர். (உகசு)

வேறு.

இயம்பிய நால்வகை நீறு மிங்கிவை
வயம்பெற வணிந்திடு மாறு மாறிலா
வியம்பெறு புண்ணிய விளைவுஞ் சொற்றன
நயம்பெறு கண்டிகை நவில்வங் கேட்டிரால். (உகஎ)

---

உருத்திராக்கம்.

வேறு.

திரிபுர ரெனும்பேர ரவுணராற் சிதைந்து சிந்திய மான்முதற் றேவர், புரிதரு தவமோ ராயிரம் வருடம் புரிந்திட வியந்துபோய்ப் புராரி, யிதிதென் றிரங்கிக் கண்ணிமை யாது பார்ப்பமுக் கண்ணினு மமைந்த, விரிதுளி தாழ்ந்து கண்டிகை மரமா யெழுந்தது விழுந்ததொண் புவியில். (உகஅ)

அன்றுதொட் டுருத்தி ராக்கமென் பெயர்மூப் பானொடெண் பேதமாம் வெண்மை, யொன்றிய சிவப்பவ் விருநிறங் கலத்த லுமைத்திடுங் கருமையிக் கான்கின்,றென்றுநான் மறையோன் வெண்மைமன் சிவப்புச் சொன்னிறங் கலந்தது வணிகன், வன்றிறற் கருமை சூத்திரன் சாதி வருணநால் வர்க்குமிவ் வகைத்தாம். (உகக)

ஒருமுகஞ் சிவன்றன் வடிவுநான் மறையோர்ச் செகுத்ததீங் கொழித்திடு மிரண்டா,வருமுகஞ் சத்தி சிவம்பசு வதைத்த வன்பழி மாற்றுமும் முகந்தீப்,பெருகுபெண் கொலைதீத் தருளுநான் முகனுன் முகன்பிழை நரகத்தி போக்கு, மருவமையம் முகங்கா ளாங்கிருத் திரனூனுரித்தலர்ப் புணர்ச்சிபொய் யகற்றும், (உஉo)

அறுமுகன் வேலன் வலக்கையி லணிவ தகன்றிடும் பிரமகத்தியுமே, மூழுமுக மனந்தன் கோக்கொலை யொடுபொற் களவினும்

வருபவ மொழியு,மறுவிலெண் முகம்வா ரணமுகன் குருபன் னியை
த்தொடல் வருதுலே முதலாப், பெறுபல தானம் பிறன்கையி லன்ன
மேற்றிடும் பிழைநீங் கிடுமால். (உகக)

இயம்பிய வொன்பான் முகமுவயி ரவனு மிடக்கையிற் றரிப்ப
து வல்பார், வயம்பெறு தக்க கன்முத லரவம் வதைத்தல்போ முத்
தியு மெய்து, நயம்பெறு மொருபான் முகத்திரு நெடுமா ஞனொடு
கோள்பெரும் பூத, முயங்குபேய் பிரம ராக்கதன் மற்று முடற்றிடும்
பெரும்பய மொழியும். (உ௨0)

பதிெனாரு முகம்பன் னோருருத் திரராம் பகர்பரி மேதமா யிரம்
பன், னிதியொடு கோதா னம்மொரு நூறு யிரந்தரு பயன்களை நிறை
க்குங், கதிகொள்பன் னிருமா முகங்கதி ரொருபா னிரண்டதாங் கா
ஞ்சன மேரு, விதிதரு தானம் புரவியச் சுரபி மேதநல் கியபயன் றரு
மால். (உஉக)

செறிதரு பதின்மூன் றுமுகங் கந்தன் சிந்தையில் வேட்கைபொன்
னிரத, நெறிதரு சயமு மளிக்குநற் றுணைதாய் தந்தையர்த் தெறுங்
கொலை நீக்குங், குறிதரு பதினான் முகஞ்சிவஞ் சத்தி கூறும்வின்
ணவர்தவ ரிறைஞ்ச, வறிதரு வசிய நல்கியூ ழியினு மழிதரா வுலகி
லுய்த் திடுமால். (உஉஉ)

கிளத்திய பதினைன் முகம்பெற லரிது கிட்டுமேற் கண்டத்திற் றரி
ப்ப, துளத்தினி னிங்காச் சிவன்சத்தி மந்தி ராதியு மெய்ப்பதொண
முத்தி, விளைத்திடும் பதினைம் முகம்பரீ நாதம் விளம்புமெய்ப் பாவமும்
வீட்டுந், திளைத்தெழுங் கருணைச் சோதியோ டொன்றித் தீர்வினா
முத்தியிற் சேர்க்கும். (உஉ௩)

நீசராங் குணுங்கர் குணுங்கர்கன் னியரு ஞெறியிலா மதுமுகல்
புசித்தோர், நீசரு ளருட்கண் மணிசிரந் தரித்தா லிருவினை தொலைத்
தா ருவர், மாசிலாக் குலத்த ராயினு மீசன் கண்மணி வனைந்திடார்
நீசர், சீசியன் னரைத்தீண் டினுமதி பாவ மணிகிலா ரலக்கணர் தெ
ரிப்பார். (உஉச)

வேறு.

உச்சியிலொன் றணிசிரத்தி னொருமுப்பத் தாறெண்ணான்
கொளிர்கண்டத்தி, லிச்சையுறு செவிக்கவ்வா றாரத்திலைம்பான் கை
த்தலத்தெண் ணிரண்டி ராறும், விச்சைதரு மணிக்கட்டிற் றுழ்வட

ங்க ணூற்றெட்டும் விளங்கச் சாத்தி, கச்சிகடங் திமெடிக்கோ ரய்
மேத கவிற்றிவுருந் திரனே யாவர். (உஉ௫)

காணினுமக் கண்டிகையின் பயனிலக்கம் பரிசிக்கிற் கோடி க
ண்மே, பூணினுமா யிரங்கோடி செபத்தனந்தம் பயனிமையோர்
பூசைக் கேற்ற, தாணுவைப்போ லுவர்பகைக்குந் தாழ்ந்தடங்கார்
தணந்தரிக்கிற் சுணங்கற் கேனுமாணுறுகற் கதிகொடுக்கும் புகழ்ந்த
ணிந்த மானிடர்க்கென் புகல்வ தம்மா. (உஉ௬)

சிகையினிற்கண் டிகைதரிக்கிற் பயன்கோடி திண்செவியி லொரு
பான் கோடி, மிகையறுகந் தரத்தினிலா யிரங்கோடி மிளிர்கரத்தி
லனந்த மாகும், பகைதருவெந் தீவினைக ளெத்தனைசெய் தோருமிது
பரமென் றெண்ணித், தொகைபெறுநாட் கழித்திறுங்கா லருந்துவ
ரேற் பிறப்பவரைத் தொடரா தம்மா. (உஉ௭)

நீங்கரிய முப்புரிநூ லின்றிமறை நிகழ்த்துவதெவ் வாறவ் வாறே
தாங்கரிய கண்டிகையும் புண்டரமுந் தரித்திடுமந் தணருக் கேனு
மோங்கியிடத் தவ்வாது தரித்திலரே லீராட லோத லீதல் [தால்.
பாங்குபெறத் தென்புலத்தோர்க்குதவுதலர்ச்சனைமற்றும் பயன்படா

*கண்மணியா யிரந்தரித்தோர் சிவனெனமான் முதற்றேவர் கரு
திப் பூசை, பண்ணுவர்மா முடிதரித்து மூழ்கியிடிற் கங்கைபடி பல
னுங் காதி, லெண்மணியை முழுதுமணிந் தவர்மூவேழ் சுற்றமிடர்
நரகு நீங்கு,மொண்ணவமா டிணிபடிகம் பொன்னிடைகோத் தணி
யிலவ ருறுவர் முத்தி. (உஉ௮)

ஏகமுக மைந்துமுகம் பதினொன்றே ஙிரண்டுமுக மிவற்றை
யெண்ணி, வாகுறுமந் சனம்புரியா தன்பினொடு முளமிரங்கி வழுத்
தி யீச, னாகமநூல் விதியினருச் சனைசெய்வோர் செல்வமுத்தி யடை
வர் காசி, பாகனுருச் சின்மயமா மணியணிந்தோர் பெற்றகதை பக
ர்வாம் கேண்மின். (உ௩0)

நந்தியெனு மொருநகர்வா ழீசனு லயத்தடிச்சி நங்கைப் போராள்,
விந்தைசெறி சேவலொன்று வானரமொன் றிற்கும்மணி மிலைந்து
தானும், புந்தியுறத் தரித்தவற்றே டாள்கயிலை யடைந்தனள்போய்க்
கழுதை யொன்று, நந்துமணிப் பொதிசுமந்து விந்தையினி லிறந்துக
ற்பங் கயிலை நண்ணும். (உ௩௧)

புட்காரதே யத்துமன்னன் சவுமியன்றன் மனைபொருவிப் பொய்ம்மை மாதர், நட்புறுவா னவன்மனைவி வசுமதியும் வேள்கணையூ னலிந்து வாடிக், கட்புலனீ ரொழுகவருந் துறுவாள்கண் மணிதரித்தக் கணவற் சேர்ந்தாள், கொட்புறுமம் மனன்றரித்தொன் ஞர்புவியுங் கொண்டனன்போய்க் கயிலை புக்கான். (உகூ௨)

கனகழன்மே ஞட்டரசன் ருமைக்கண் ணன்கால ஞானியென்னு, மனைவியொடு மிகவினீ பதியெனக்கு நிற்குநான் மனைவி யர்வேன், புனைசுவர்ச்சித் திரமாயன் புகலிலென வவன்கண்மணி பொருளென் றேற்த,வனையன்மட வரலாறு னவள்புருட னுறுள்சேர்ந் தரன்றாள் சேர்ந்தார். (உகூ௩)

உருத்திரவக் கம்புனைவோர்க் கனமிடும்வே தியன்சுப்ர தீபனோங்கு, மருத்தியினு லவனருளால் விண்ணகர்போய்த் தருக்கொணர்ந்தே யளிக்கும் பூனைு, வருத்துபசி யால்வந்த மறையவனே டிகலுமறு சமயி யான,விருத்தமறை யோகரங்கன் கண்மணிபூண் டரன்கயிலை மேவி னரால். (உகூ௪)

மிளிர்கலிங்க நாட்டுவியாக் கிரபுரத்தோர் வேதியன்சா மித்திரனென்போன், களவினின்மேம் பட்டோன்பல் லுயிர்செகுத்தோன் வளர்த்தமறைக் கள்ளத் தாதை, தளர்வுறவே செகுத்தயன்மா தைப்புணர வன்னள்கிளை தடிய வீந்தான்,றிளைதராய லாகாளிற் காகமணியுடல்வீழ்ப்பக் கயிலை சேர்ந்தான். (உகூ௫)

மாகரநாட் டுறையுமொர்வே தியன்மதலை சாந்திகனோர் மணிமேற் பூண்பான், சாகரநாட் டரசுகொளத் தான்காளி நரபலிக்கு விலைப்பட்டேகு,பாகரநாட் டதுவிலக்கி யவ்வரசன் மகளைமணந் தரசா யிந்து, சேகரன்கண் மணியணிவித் தவன்கிளைதன் கிளையொடும்போய்க் கயிலை சேர்ந்தான். (உகூ௬)

அக்கமா மணியணிந்தோர் பெற்றகதை யிற்சிலகா மனறந்தோமம்பொன், மிக்கதா மிரம்வெள்ளி யியன்றவற்றுற் பொதிந்தவற்றுல் விளங்கும் பின்னற், றெக்குறுகம் பியிற்கோத்துப் பெரிதணிந்தோர் முப்பொருளுந் தெளிந்த தூயர், தக்கமணி யணிந்தோரைச் சிவமெனவே பணிப்போர் தக்கோர் தாமே. (உகூ௭)

உரைத்தன்மா மணிப்பெருமை படிப்பவர்ந் துண்மையென வுவந்து கேட்போ, ரிரைத்தநதிச் சடையோனை நிகர்ப்பர்மணி வெ

ண்ணீரேற டியைந்து பூண்டு, நிரைத்ததிரு வஞ்செழுத்தை யுச்சரித்
தந் நிலையுணர்ந்தோர் நேர்மை யாரே, வரைத்துரைப்பா ரறிந்தவா
தொகுத்திசைப்பே மென்னமுனி வரர்க்குச் சொல்வான். (உ௩௮)

---

## பஞ்சாக்கரம்.

### வேறு.

அருளை யஞ்செழுத் தாக்கியே யம்பிகைக் கமலன்
பொருள்வி ளங்கிடப் புகன்றநிம் மந்திரம் புகல்சற்
குருவ றிந்துளந் தேறுறத் தெளிப்பதாங் குணித்து
வருப யன்பெற வுணர்ந்துளோர் பேற்றையார் வகுப்பார். (உ௩௯)

அஞ்செ ழுத்தினு ளோரெழுத் தின்பய னளவை
கஞ்ச நாண்மலர்க் கண்ணனுங் கண்ணனுங் காணார்
செஞ்ச வேபிர ணவத்தொடுஞ் சேர்த்தியுச் சரிக்கிற்
பஞ்ச பாதக ராயினும் பரனெனப் படுவார். (உ௪0)

இன்ன வஞ்செழுத் துணர்வி னுமுயிர் சென்று
பன்ன காபர னன்பதஞ் செறிந்திடும் பரிசா
லன்ன மந்திர மேபரப் பிரமமா துணர்ந்து
மன்னு வோர்நிழற் படினுங்காண் னினும்பவ மாறும். (உ௪க)

மூன்று காலமு மாலயத் தனுதினக் கணன்றா
ஞன்றி யேதொழு துள்ளத்தவ் வஞ்செழுத் தெண்ணிற்
றோன்று புண்ணிய மியாவுமவ் தடங்குந்தொல் வினைபோ
மேன்ற பார்புரந் திருங்கதி மூவரிற் பொலிவார். (உ௪௨)

### வேறு.

மந்திரித்த விறையெழுதிப் புத்திரசீ வத்தொருபான் மணியாஞ் சங்கி
னந்தமொரு நூறுபளிங் காயிரமுத் திலக்கநறு மரையின் கோடி
சந்திரத்திற் பதின்கோடி குசைமுடிப்பா யிரங்கோடி. தானு வான
மூந்துசிவன் கண்மணியின் பயனனந்த மெனவேத முடிபுசொல்லும்.

வளமனையி லொன்றுபசுத் தொழுவிலொரு பதுநதியின் மருங்கு
நூறு, விளர்தருமா லயத்தினுளா யிரம்வனத்து விலக்கமுயர் கிரியிற்
கோடி, மூளைமதிச்செஞ் சடைமவுலி திருமுன்ன ரளப்பில்பயன் முற்
றும் பெற்ற, வுளமுறவஞ் செழுத்தாதி கண்மணித்தா ரெடுத்துணர்
ந்துச் சரிப்போர்க் கம்மா. (உ௪௪)

திரைத்தகடற் புவிபோற்று மஞ்செழுத்தைச் சிந்தைசெய்து தெளியப் பெற்றோ, ரிரைத்தமறை யாகமநூல் விதியறிந்து செபிப்பர்முறை யியல்பு கூறி, னிரைத்தசெப வடங்களோநூற் றெட்டென்று மதிற்பாதி நிகழ்ந்த தென்று, முரைத்திடுவ ரதிற்பாதி யளவென்று மின்னுமுரைத் திடுவாங் கேண்மின். (உ௪௫)

முத்திநெறிக் கையைந்து சோமனத்திற் கியம்பியமூ வொன்பரன் கூறு, மெத்துசிதிக் கொருமுப்பா னுபிசா ரத்தொழிற்கு மேவைம்மூன்று, வித்தன்மணி வடந்தொடுப்பின் மேற்குமேல் கீழ்க்குங்கீழ் மேரு மேலாய்ப், பத்திபெற வொன்றுபடுத் திடைமுடிந்து தொடுப்பர்பரம் பரனூல் கற்றோர். (உ௪௬)

உடல்வெறுத்தான் மேல்போக்குங் கீழ்போக்கு முறுபோகஞ் சார்வான் மேரு, வடைவுபெற விலங்கியா தனுமிகையே மத்திமைதர்ச் சனியங் குட்டந், திடமுறவே வடகடத்திற் பிணியறலுந் தனம்புகலுந் தெவ்வர் மாய்ப்பு, மிடரறுநன் முத்தியடை தலுமடையு மென்பர்கதிக் கிலக்கஞ் சொல்வார். (உ௪௭)

வேறு.

இனைய தாகிய வஞ்செழுத் தெண்ணியே
வினையி னீங்கின ரெண்ணிலர் மேதக
வனையர் பெற்ற வருங்கதை யிற்சில,
முனைவிர் கேட்குதி ரென்று மொழிகுவான். (உ௪அ)

வேறு.

மதுரையம் பதிவா ழெதுகுல மன்ன்ன் றசாருகன் காசிமன் மகளாம், புதுமதி வதனக் கலாவதி யின்னே வேட்டனன் புணர்ந்திடப் புகுங்கால், விதுநதி வேணி யஞ்செழுத் தோதி மேவெனக் கர்க்கர்பால் வினவிக், கதுமெனக் கொடியாய்ப் பவஞ்சிதிக் கிடப்போ யுவட்புணர்ந் தடைந்தனன் கயிலை. (உ௪௯)

இல்லறத் தினிலஞ் செழுத்துணர்ந் திருக்கு மியன்மறைத் தருமனே டிகலிப், புல்லறத் தியோகி சந்திர னில்லிற் றுறவதே பெரிதெனப் புகன்று, மல்லல்கூர் மகவான் மலரய னிவரை வருவிக்குந் தருமற்குத் தோற்றே, யொல்லையன் னவற்றூழ்ந் தஞ்செழுத் துணர்த்த வுணர்ந்தில்வாழ்ந் துறைந்தனர் சிவன்றாள். (உ௫0)

சூரிய சன்ம னென்றொரு மறையோ னுணர்ந்தன் புணர்ப்பினுற் சுதனைச், சீரிய பசுவை மருகியை யறியான் வதைப்பவச் செழுங்கவு

சிகைாட், டேர்பெறு மறையோர் சிறமுன் கோயி லிடபம்புற் றினை
வரித் திறந்தோ, ராருயிர் பெறக்காட் டினன்கதி யடைந்தா னஞ்
செழுத் துண்மையா லறிவான். (உ௫௧)

வேறு.

அஞ்செழுத் தியலு மோதி னவர்பெறு பயனுஞ் சொற்றும்
விஞ்சுநீ றுருத்தி ராக்கம் விளம்புமந் திரமேற் கொள்வோர்
நஞ்சணி கண்ட ருமை நாரூமுச சரிக்க வேண்டுந்
தஞ்சென வினிது கேண்மின் சாற்றுது மென்று சாற்றும். (உ௫௨)

---

சிவநாமம.

வேறு.

அரகர கங்கா தரமணி கண்டா வலர்பூமன்
சிரகர தந்தா வளமுகர் தந்தாய் சிவனேமுப்
புரகர மைந்தா ரரவம ணிந்தாய் பொருளேயென்
றுரகர ணந்தா னுறவுரை தந்தார் சிவனவார். (உ௫௩)

பகன்மதி நம்பக வுயர்திரி யம்பக பரநாதந்
திகழ்பர விந்துவி னுருவமை சுந்தர தெளிகூடற்
சுகநிற வந்தரி யொருபுடை தங்கிய சொக்கேயென்
றகமகிழ் தந்தொரு பொழுதுமொ ழிந்தவ ரரனவர். (உ௫௪)

முழுத்தவர் சூழ்கரு ணைகர வாகர முதலேயைந்
தெழுத்துரு வாகுந டேசச தாசிவ விறையென்றே
வழுத்தினர் நாமவெ ழுத்தொன் றிற்கிறை வடிவாவ
ரழுத்திய மற்றையெ ழுத்தரன் மேற்றனி செனவாகும். ()

வேறு.

ஈனக் கொடும்பாவி தகரேனு மொருகா லீசன் பெயரிசைக்கின்,
ஞானக் கடன்மூழ் கியதவத்தோர் நாடுஞ் சிவனே யெனப்படுவார்,
வானத் தவர்போற் றருநாமம் புகன்றோர் பெறுமவன்சரிதை, மோ
னத் தவமா முனிவீர்காண் மொழிவாங் கேண்மினெனமொழிவான்.

கலிங்க நாட்டில் வீரியனென் றொருநான் மறையோன் கமழ்ம
துவு, னிலங்க வயின்றும் விலைபகர்ந்து மீனப் புலைச்சி தோடோய்ந்
தும், வலங்கொ ணெறிநீத் திறக்குங்கான் மதுவின் விலையோர் சிவ
மென்றான், புலங்கொ ளீசன் கயிலையிற்போய்ப் புனித வுருப்பெற்
றிருந்தனனால். (உ௫௭)

